

விகாஹே தீர்த்த பஹுளாம் சீதளம் குரு ஸந்நதிம்
ஸ்ரீநிவாஸ தயாம்போதி பரிவாஹ பரம்பராம் ||

"ஏரியில் நீர் நிரம்பிவிட்டால் மேல் வழிந்து ஓடும் நீருக்குப் போக்கு விடவேண்டும். திருவேங்கடநாதனது கருணையானது, கடல் போன்ற ஒரு மிகப்பெரிய நீர்நிலையாகும். அது பொங்கி வழிந்து ஆசார்ய பரம்பரையென்னும் நீர்ப்பெருக்கு ஏற்பட்டது. அதில் இறங்கும் துறைகளாகப் பல ஆசார்யர்கள் உள்ளனர். அவர்களது பரம்பரையானது சேதநர்களிடம் மிகக்குளிர்ந்த எண்ணமுடையது. அவர்களாக கருதப்படும் துறைகளில் ஆழ்ந்து முழ்குகின்றேன். துறைகள் இல்லாவிடில் நீரில் இறங்கி நீராடமுடியாது. அவ்வாறே ஆசார்யர்கள இல்லாவிடில் எம்பெருமானது கருணை நமக்குக் கிடைக்காது.

தயா சதகம் - 2.

(நன்றி: விப்கோ.)

# ஸப்தகிரி

## ஜூலை - 1994


தனிப்பிரதி ரூ. 2 | மலர் 25

வருடச்சந்தா ரூ. 24 | இதழ் 2



சிறப்பாசிரியர் :
திரு டி.வி.எஸ்.ஆர். மூர்த்தி, ஐ.ஏ.எஸ்
செயலாட்சித்தலைவர்,
தி.தி.தேவஸ்தானம்,
திருப்பதி.

ஆசிரியர்:
திரு. கே. சுப்பாராவ், எம்.ஏ.,

துணையாசிரியர்:
திரு. என்.எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

அச்சிடுபவர்:
திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி.தி.தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

பிரதிகளுக்கு:
EDITOR,
"Sapthagiri"
T.T.D., Tirupati.


## உள்ளுறை

பக்கம்



## அட்டைப்பட விளக்கம்

| | |
|---|---|
| முகப்பட்டை | : வைர அங்கியில் ஏழுமலையான் |
| முதல் உள்ளட்டை | : ஆனிவார ஆஸ்தானம்-திருமலை. |
| 2-வது உள்ளட்டை | : சாக்ஷாத்கார வைபவம்-ஸ்ரீநிவாசமங்காபுரம் |
| பின்னட்டை | : திருமலைக்கோயில் காட்சி. |
| நடுப்பக்கத்தில் | : ஸ்ரீபத்மாவதி தாயார் திருக்கோயிலும், தெப்பக்குளமும், திருச்சானூர். |

JAGADISH

# உங்களுடன்....

மனிதர்களிடையே நிலவும் உறவானது, மற்றைய உயிர்களிடையே அமையும் உறவைவிட மேலானது; புனிதமானது. மனிதனை விடுத்து, பிற உயிர்களிடையே இருக்கும் உறவானது தன்னலமிக்கது. அங்கு தாய்மை உறவும் சிறிது காலத்திற்கே தொடரும். பசி என்று வந்துவிட்டால் உறவுக்கு அங்கு இடமில்லை. ஆனால் மனிதன் உறவுக்காக உயிர் கொடுப்பவன். உறவுக்குப் பெருமை தருபவன்.

இந்த மனிதர்களிடையேதான் எத்தனை உறவுகள். தாய்-தந்தை, பெற்றோர்-குழந்தை, கணவன்-மனைவி, சகோதரன்-சகோதரி என்று நேரிடையாகவும் சுற்றி வளைத்தும் உறவுகள் தொடருகின்றன. இவ்வுறவுகளுக்குப் பின்னணியில் பாசம், அன்பு, காதல், கடமை போன்ற உணர்வுகள் பொதிந்துள்ளன. இந்த உறவுகளுக்கிடையேயும் 'தன்னலம்' எனும் இழை ஊடுருவி உள்ளது என்றே சொல்லவேண்டும். மேலும் எதிர்பார்ப்பு, பொறுப்பு போன்ற காலத்தின் கட்டாயத்தால் ஏற்படும் உணர்வுகளும் மனிதர்களிடையே உறவுகளை இழுத்து வைத்துள்ளன. ஆனால் இவ்வுறவுகளும் அக்காலத்தின் கட்டாயத்தாலேயே ஒரு கட்டத்தில் சிதறவும் செய்கின்றன. இந்த நிலையில் எது உண்மையான உறவு? எது இம்மைக்கும் மறுமைக்கும் மகிழ்ச்சியை தந்திடும் உறவு?

பெற்றோர் - குழந்தை உறவைவிட இப்புவியில் வேறெந்த உறவு ஆற்றலுடையதாக, ஆழமுடையதாக இருந்திடமுடியும். ஆனால் குழந்தை வளர்ந்திட்ட போது அதற்கு மனைவி- கணவன்-குழந்தை என்ற குடும்பம் வந்திட்டபோது, பெற்றவைகளுக்காகப் பெற்றவர்களை மறந்திட்டபோது பெற்றோர்-குழந்தை என்ற உறவு பொருளற்றதாகி விடவில்லையா? அப்போது வேறு எந்த உறவு உறுதியானது? மனிதனை மேம்படுத்தும்?

இறைவன்-மனிதன் உறவே ஒருவனை நல்வழிப்படுத்தும்; மற்றவரையும் உயர வைக்கும். அந்த உறவு அவ்வளவு எளிதில் மனிதனுக்குக் கிடைத்திடுமா? அந்த உறவுக்கு வழிகோலுவது யார்? வேத உபநிடதங்களைப் படிப்பதால்மட்டுமே இந்த உறவு ஒருவனுக்குக் கிடைத்திடுமா? இறைவனை மனிதன் சந்தித்தால்தான் இந்த உறவு எளிதாகும். இந்தச் சந்திப்பை ஏற்படுத்தித் தருவது யார்? 'குரு' ஒருவரே இந்த உறவுக்குப் பாலமாக அமைந்திடமுடியும்.

அறியாமை எனும் இருளை அகற்றுபவரே குரு எனப்படுவார். மறுமை வாழ்வுக்கான அறங்களை இப்பிறவியில் மேற்கொள்ளாது, உலகியல் இன்பங்களையே உயர்வாகக் கொண்டு வாழும் நிலையானது மனிதனின் அறியாமையின் விளைவாகும். இதிலிருந்து அவனை மீட்டு, இம்மை வாழ்க்கையில் பிறர்க்காகவும், மறுமையில் இன்பம் பெற தனக்காகவும் மனிதன் வாழவேண்டிய அவசியத்தைச் சுட்டிக்காட்டி, அவனைத் திருத்திடும் வகையில், ஒரு தகுந்த வழிகாட்டியாக இருப்பது 'குருவே'யாகும். இந்த 'குரு'வையே, நல்லனவற்றை முன்கூட்டியே அறிவுறுத்தும் சான்றோர் எனும் கருத்தில் 'புரோஹிதர்' என்றும் ஆன்றோர் அழைத்தனர். அதனால்தான் கண்ணன் கீதையில் 'புரோஹிதர்களில் நான் பிரகஸ்பதியாக உள்ளேன்' என்று அறிவுறுத்தியுள்ளார்.

குருவுக்கும் சிஷ்யனுக்கும் உள்ள உறவைப் பொருத்தே இருவருடைய பெருமையும், சிறப்பும் பேசப்படுகின்றது. திசை தெரியாத காட்டில் வழிநடத்திடும் காவலனாக விளங்கிடும் 'குரு'வானவர் வேதகாலந்தொட்டே வாழ்க்கையில் முக்கிய இடம் பெற்று வருகின்றார். ஸ்வேத கேதுவுக்கு உத்தாலகனும், மைத்ரேயிக்கு யாக்ஞவல்கியரும், பிருகுவுக்கு வருணனும், நாரதருக்கு சனத்குமாரரும் குருமார்களாக இருந்த செய்தியினைப் புராணங்கள் கூறும். மாமுனிவர்களுக்கு மட்டுமல்ல, கடவுளர்களுக்கும் குருவானவர் இன்றியமையாதவர் என்

பதை கிருஷ்ணன் சாந்தீபினியையும், இராமன் வசிஷ்டரையும், விசுவாமித்திரரையும் தங்கள் குருவாகக்கொண்டது உறுதிப்படுத்தும். இந்து சமயத்தலைவர்களான ஸ்ரீசங்கரர் ஸ்ரீகோவிந் தாசார்யரையும், ஸ்ரீராமானுஜர் யாதவபிரகாசர் மற்றும் ஆளவந்தாரையும், ஸ்ரீமத்வர் அச்சுத பிரேக்ஷரையும் குருவாகக்கொண்டது 'குரு'வின் அவசியத்தை வலியுறுத்தும்.

குருவுக்கும் சிஷ்யனுக்கும் இடையே உள்ள உறவு புனிதமானதாகவும், தன்னலமற்றதா கவும், தியாக உணர்வு மிக்கதாகவும் இருத்தல் அவசியம். அவர்கள்தம் உறவு பழுதுபடின், விளைவுகள் தீமையே பயக்கும்.

தேவேந்திரன் தான் நடத்திய யாகத்திற்குத் தலைவனாக - தன் குருவாக துவஷ்ட்ர புத்திரனான விஸ்வரூபனைக் கொண்ட போது வேள்வியின் அவிர்பாகத்தை, 'குரு' நிலை பிறழ்ந்து, தேவர்களை ஒதுக்கி தன் இனமான அசுரர்களுக்குப் பங்கிட்ட காரணத்தால் விஸ்வரூபன் தன் சிஷ்யனான தேவேந்திரனால் அழிக்கப்பட்டான். இதனால் குரு வின் பொறுப்பு, கடமை சுட்டிக்காட்டப்பட்டது. கசன் எதிரி இனத்தைச் சேர்ந்தவனாக இருந்தாலும், தன் உயிரைக் கொடுத்து அவன் உயிரைக் காப்பாற்றியவனும், பலிச்சக்கர வர்த்தியை அழிவிலிருந்து காப்பாற்றும் பொருட்டு, கமண்டலத்தில் வண்டாக நுழைந்து, தன் கண்ணை இழந்தவனுமாகிய அசுரகுரு சக்ராசாரியார், கடமைக்கும், தியாகத்திற்கும் உதாரணமாக விளங்குகின்றார். நகுஷன் எனும் அரசன் தனக்குக் கிடைத்திட்ட தேவேந்திர பதவி காரணமாக மமதை கொண்டு, குருவான குறுமுனிவராம் அகத்தியரை காலால் எட்டி உதைத்திட்டபோது, குரு சாபத்தால் தன் உயர்ந்த நிலையிலிருந்து பாம்பாக மாறினான். இதனால் குருவை அவமதித்தவன் எவ்வளவு ஆற்றலுள்ளவனாக இருந்தாலும், இறுதியில் இழிநிலையே அடைவான் என்பது பெறப்பட்டது. குருவின் அறவுரையை இழந்தவர்கள் தங்களையே இழப்பர் என்பதற்குப் பாணுசுரன், கர்ணன், பலி, இராவணன், துரியோதனன் போன்ற அழிந்துபட்டோர் பட்டியல் உதாரணமாகும்.

புராணங்களும், இதிஹாஸங்களும் குரு-சிஷ்யன் உறவின் மேன்மையைக்கூறும் கருத் துக்கள் இன்றைய நிலையில் எந்த வகையில் பயனுள்ளதாக அமையும் என்பதைப் பார்க்க வேண்டும். அன்றைய குரு-சிஷ்யன் உறவு என்பதை இன்றைய ஆசிரியர் - மாணவன் உறவுக்குப் பொருத்திக்கூறலாம். பொதுவாக ஒருவன் தன் வாழ்க்கையில் இளமைப் பருவத்தை அதிகமாக கல்விச்சாலைகளில் பெரிதும் கழிக்கின்றான். அதுபோது வீட்டுச் சூழ்நிலையைவிட வெளிச்சூழ்நிலையையே அதிகமாக அவன் எதிர்கொள்கின்றான். அந்த காலச்சூழ்நிலையே ஒருவனை அறிவாலும், மனதாலும் உயர்த்தவும், தாழ்த்தவும் வழிசெய் வதால் ஆசிரியர் - மாணவன் உறவு அந்தக்கட்டத்தில் முக்கியத்துவம் பெறுகின்றது. இந்த உறவே தனிமனிதனையும், அவன் மூலமாக அவன் வாழும் சமுதாயத்தையும் பயனுள்ளாக ஆக்கப்பூர்வமாக செயல்படவும் வழி அமைப்பதால், ஆசிரியர் சமுதாயம் பொறுப்புடன், கடமை உணர்வுடன், தியாக உணர்வுடன், நேர்மையுடன், பரந்த மனப்பான் மையுடன், விளங்கிடுதல் அவசியமாகிறது. அதேபோன்று மாணவ சமுதாயம் கனவு வாழ்க்கை விடுத்து, சோம்பலில்லாது கட்டுப்பாடு, உழைப்பு, தேசியப்பற்று, ஒற்றுமை ஆகிய பண்புக்கூறுகளுடன் திகழ்தல் மிகவும் இன்றியமையாதது. கல்வியின் பயன் - வெற்றி, அக்கல்வியை கற்பிப்பவர் மற்றும் கற்றவர் ஒழுக்கத்தின் மீதே சார்ந்துள்ளது. இதனை இறையுணர்வு, சமய அறிவுகொண்டுதான் எளிதாக அடைய முடியும்.

நமது சமய இலக்கியங்கள் அன்றைய குரு-சிஷ்யன் உறவின் முக்கியத்துவத்தை ஏன் போற்றின? அதனால் பெறப்பட்ட பயன்கள், அனுபவங்கள் என்ன? என்பதை, இன்றைய ஆசிரியர் - மாணவர் சமுதாயம், தாங்கள் வாழும் சமுதாயத்தில் நாளும் எதிர் கொள்ளும் பிரச்சினைகளை மனதிற்கொண்டு எண்ணிப்பார்த்திடின் அதுவே, குருவுக்குரிய எல்லா இலக்கணங்களையும் தன்னகத்தே கொண்டு விளங்கிடும் வியாசரைப் போற்றிடும் 'குரு பூர்ணிமை' என்று குருவுக்கு ஏற்றம் தரும் திருநாளைக்கொண்டாடுவதில் பயனிருக்கும்; அதுவே ஒரு பொறுப்புள்ள சமுதாயத்தை உருவாக்க வழிவகுக்கும்.




# சொக்கமேழா

திரு. எஸ். நம்பி - பம்பாய்.

எந்த நாட்டிற்கும் அல்லது எந்த மனிதனுக்கும் நற்காலம், பொற்காலம் என்றபடி அமைவது உண்டு. அதன்படி மகாராஷ்டிர மாநிலம் பூலோக வைகுந்தமாக மாறி. பல மகான்கள் தோன்றிய காரணத்தால் பக்தி இயக்கம் தன் தலையாய இடத்தை அடைந்திருந்தது. பக்தன் எப்போதும் பரமனை நினைத்திருப்பான். அவனுக்கு வேறு எதிலும் நாட்டம் கிடையாது. முக்தி ஒன்றுதான் அவன் வாழ்வின் நோக்கம். அப்படிப்பட்ட மனித காலத்தில் "மங்கல் வேதயா" என்ற ஊரில் வாழ்ந்திருந்தவர் பரம பக்தர் "சொக்கமேழா". அன்னாரின் மொத்த குடும்பமே பக்தியில் திளைத்திருந்தது. இவரது மனைவி சோயராபாய். தங்கை நிர்மலா. அவள் கணவர் பங்கா எல்லோரும் பண்டரிநாதனின் பக்தி மழையில் நனைந்து அவனை நினைந்து வாழ்ந்தனர்.

இக்குடும்பம் "மகர்" என்ற தீண்டத்தகாத குலத்தைச் சார்ந்தது. ஆனால் 13ம் நூற்றாண்டின் கடைசி பகுதியில் "விட்டல் சம்பிரதாயம்" ஜாதி பேதமற்ற ஓர் உன்னத வழியை உலகுக்கு காட்டியது. இந்நிலையை,

"பழுதிலா வொழுக லாற்றுப்
பலசதுப் பேதிமார்கள்
இழிகுலத்தவர்களேலும்
எம்மடியார்களாகில்
தொழுமின்நீர், கொடுமின் கொள்மின்"

என்று தொண்டரடிப்பொடியாழ்வார் பாடிப்பணிந்துள்ளார். இப்புனித குடும்பத்தார் பண்டரிபுரம் சென்று வசித்து வந்தார்கள். இப்படிப்பட்ட நேரத்திலும் இவர்கள் பண்டரி நாதனின் சன்னதியில் அனுமதிக்கப்படவில்லை.

அல்லும் பகலும் கருவறையில் நிற்கும் கருமாணிக்கத்தைக் காண, வழிமேல் விழி வைத்து காத்திருந்தார்கள். கண்ணீர் உகுத்தார்கள். பாண்டுரங்கனின் பக்தியில் கரைந்து சொக்கமேழா பல அபங்கங்களைப் பாடியவாறு இருந்தார். அதில் அன்பின் ஆழம் தெரிந்தது. பக்தி பரிமளித்தது. சரணாகதி பக்தி பலித்தது. இப்பாவத்தில் நின்று திருமங்கையாழ்வார் கீழ்க்கண்டபடி பாடிப் பணிகிறார்.

"தாயே தந்தையென்றும், தாரமே,
கிளை மக்களென்றும்
நோயே பட்டொழிந்தேன், நுனைக்
காண்பதோர் ஆசையினால்
வேயேய்பூம்பொழில் சூழ்
விரையார் திருவேங்கடவா
காயேன் வந்தடைந்தேன்; நல்கியா-
ளென்னைக் கொண்டருளே!"

ஆனால் சொக்கமேழாவிற்குக் குழந்தை பாக்யம் கிடையாது. இதில் மனம் வேதனையுற்றாலும், பாண்டுரங்கனின் பக்தியைத் தவிர அவனிடம் வேறு

ஒன்றும் அவர்கள் கேட்க வில்லை.

இப்புனிதப் பதிகளைச் சோதிக்க நினைத்து, பக வான் ஓர் பிராமணத்தவனாக தோன்றி அவர்கள் வீட்டை அடைந்தான். அதோடு நிற்க வில்லை. 'எனக்கு மிகவும் பசி யாக இருக்கிறது. வீட்டில் எது இருந்தாலும், எனக்குக் கொடுங்கள்' என்று இறைஞ்சி னான். சேயபாய் அவர் பாதத் தில் பணிந்து "ஐயா விருந்தா ளிகள் பகவானின் அம்சமாக இருந்தாலும், நீங்களோ பிராம ணர், நாங்கள் தீண்டத்தகாத மகர்ஜாதி. எங்கள் வீட் டில் நீங்கள் சாப்பிட்டால் இந்த ஊர் ஜனங்கள் எங்களை சும்மா விடமாட்டார்கள். எங்களுக்குப் பல துன்பங்கள் நேரும்" என்று பணிவுடன் கூறினாள். ஆனால் பிராமணர் விடுவதாக இல்லை. "அவர்கள் எந்தத் துன்பத்தை யும் தராமல் நான் பார்த் துக்கொள்கிறேன், வீட்டில் உங் கள் கையால் தயாரித்தது எது இருந்தாலும் உடன் கொண்டு வாருங்கள்" என்று மீண்டும் வற் புறுத்தினார்.

அன்னாரின் அன்பான வார்த் தைகளும், கம்பீர தோரணை யும், பகவானே அவரை அனுப்பியிருப்பதாக நினைத் தாள். எனவே, நன்றாக மெழுகி துடைந்திருந்த மண் வீட்டுத் தரையில் உட்காரவைத்து அன் புடன், சொக்கமேளா வந்தால் சாப்பிட வைத்திருந்த, தயிர் சாதத்தை அன்புடன் பரிமாறி னாள். வந்த பிராமணர் ஒவ் வொரு உருண்டை சாதத்தை யும் ரசித்து, ருசித்துச் சாப் பிட்டு நினைவுற்றார். அவன் அன்று வேடுவச்சி சபரி கொடுத்த பழங்களைத் தின்று பசி தீரத்தவனாயிற்றே! சாப் பிட்டு முடிந்ததும் தான் யார் என்பதையும் விண்டு வைத் தார். தாங்கொணா சந்தோ ஷத்தில் திளைத்த சோயபாய் உலுக்கிப் பிடுங்கிய மரம் போல் பகவானின் பாதத்தில் வீழ்ந் தாள். மீண்டும் அவர்நிலை கீழ்க்கண்டவாறு இருந்தது என் றால் மிகையாகாது. திருமங்கை யாழ்வார் வாக்கைக்கேளுங்கள்.

"வந்தாய்; என் மனம் புகுந்தாய்;
மன்னி நின்றாய்
நந்தாத கொழுஞ்சுடரே! எங்கள் நம்பீ
சிந்தாமணியே! திருவேங்கடம் மேய
எந்தாய்! இனியாலுன்னையென்றும்
விடேனே!

பகவான் 'தாயே உனக்கு என்ன வரம் வேண்டும் கேள்' என்றான். 'பகவானே எனக்கு வேறு ஒன்றும் வேண்டாம், நீ சாப்பிட்டு மீந்ததை நான் சாப்பிட வேண்டும்' என்றாள். என்னே அவள் உயர்வு? அவள் விருப்பப்படி பாண்டுரங்கன் ஒரு சில சோற்றுப் பருக்கைகளைத் தன் கையால் கொடுத்தான். அதோடு அவள் உன்னத பக் தியை மெச்சி "உனக்கு நன் மகன் பிறப்பான்" என்றும் ஆசீர் வதித்தான். அதன்படி அவர்கள் "கர்ம மேளா" என்ற சற்புத் திரனுக்குப் பெற்றோர் ஆனார் கள். இவனும் தந்தையைப் போலவே பிற்காலத்தில் சிறந்த பக்தனாக விளங்கினான்.

இப்பெருமைகளை அடைந் தும், இன்னும் பண்டரிநாத னின் வாசலில் இருந்தே பக்தி செலுத்தி வந்தார்கள். சொக்க மேளாவின் பக்தியின் வேகம் பகவானுக்கே தாங்க முடிய வில்லை. ஓர் இரவு பகவான் வந்து சொக்க மேளாவின் கையைப் பிடித்து அழைத் துச் சென்று தன் சன்னதி யில் கொண்டு நிறுத்தினான். அவன் இதுவரைக் காணத் துடித்தக் காட்சியைக் கொடுத்து பரவசப்படுத்தினான். சொக்க மேளா நம்மாழ்வார் கூறியது போல "............... அருவா கிய ஆதியைத் தேவர்கட்கெல் லாம் கருவாகிய கண்ணனைக் கண்டு கொண்டேனே" என்று மகிழ்ந்து நின்றார்.

கர்ப்பக்கிருகத்தில் சொக்க மேளாவின் குரலைக் கேட்டு உள்ளே நுழைந்த அர்ச்சகர் "அவரது நுழைவால கோயில் புனிதம் கெட்டது" எனக் கொதித்தெழுந்தார். சொக்கமே ளாவை அடித்துத் தரதரவென இழுத்து பீமா நதியின் (சந்தி ரபாகா) அக்கரையில் கொண்டு தள்ளினார். மீண்டும் வந்தால் கடும் தண்டனை கிடைக்கும் என எச்சரித்து விட்டு வந் தார். சொக்கா அழுது அரற் றினார். "ஓ பகவானே நான் உன் வாசலில் காத்து இருக் கும் நாய், என்னை வேறு எங் கும் துரத்தாதே" என்று உருகி னார். இந்நிலையிலும் அவரது மனம் "உண்மையான பண்டரி நாதன் என் உடலில் இருக் கிறான், எனது உயிரே அவன் தான்" என்றுக்கூறி ஆடிப்பாடி னார். இங்குத் திருமழிசைப்பி ரான் கூற்றைக் கேளுங்கள், "அற் புத அனந்த சயனாதி பூதன் மாதவன், நிற்பதும், இருப்பதும் கிடப்பதும் என் நெஞ்சுளே"

இன்னொரு சமயம் பக வான் தன் முத்துமாலையை சொக்காவிற்குக் கொடுத்தான். இதையறிந்த பூஜாரி, திருட னென்று சொக்காவை செம் மையாக அடித்து உதைத்தார். இப்படிப் பற்பல சோதனை கள் மூலம் பகவான் இவரை

சோதித்து இவர பததிரை மாத துத தஙகம எனககணடான.

கோயில வாசலில பட்டபாடு, சொக்காவை தன தோட்டத்தில பணடரிநாதனுககு ஓர கோயி லைக் கட்டவைததது. எல லோரையும அழைதது விருநது வைததார. அநத விருந தில பாணடுரஙகன தானே நேரில வநது கலநதுகொண டான. அவனைக கணட மகிழ்ச்சியில சோரபாய் கைத தவறி ஒரு கோப்பை தயிரை அவன பீதாம்பரத்தில் கொட்டி விட்டாள். சிரித்து மகிழ்ந்த பகவான் அவளுககு தைரியம் கூறினான்.

விருநதிற்கு வந்த அனைவ ரும் ஆச்சர்யத்தில் மூழ்கியி ருந்த வேளையில், பொறுக்கமு டியாத கோயில் பூஜாரி, இது ஓர் ஏமாற்றம், யாரோ பாண் டுரங்கன் போல் ஆடையு டுத்தி வந்திருககககூடும். இந் தத் தீண்டத்தகாதவன் வீட்டில் பாண்டுரங்கன் சாப்பிட வரு வானோ? இது நடக்கக்கூடிய காரியமா? என்று நினைத்தார். கொதித்தார். கோபாவேசமாக வந்து சொக்காவின் கன்னத் தில் ஓங்கி அறைந்து விட்டு, சந்திர பாகாவில் ஸ்நானம் பண்ணி தன்னை தூய்மைப் படுத்திக்கொண்டார். ஆனால் பகாவன் உள்ளத்தூய்மையான வனை அல்லவா விரும்புகி றான். வள்ளுவன் கூறுகிறான். 'மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்தறன், ஆகுல நீர பிற" எங்கே தூய்மை இருக்கிறதோ அங்கே நான் இருப்பேன் என்று பகவானன் கீதையில் கூறியுள் ளான்.

மறுநாள் கோயில் கர்பக்கிரு கத்தில் நுழைந்த பூஜாரி ஆச்சர் யத்தில அசநதுவிட்டார. கார ணம், பாணடுரஙகனின ஓர கனனம வீஙகி இருநதது. பட்டு பீதாமபரததில தயிர விழுநத கறையும தெனபட்டது.

தன தவறறையும், சொககா வின தூய பகதியையும கண் ணால கணட பூஜாரி, சொககா வின காலில போய விழுந தார. பலவாறு மனனிப புககேட்டார. அனனாரின கையைப பிடித்து அழைதது வநதார. பகவானின கரபபக கிருகததில கொணடு நிறுததி னார. எவவளவு நேரம் வேண டுமோ அவவளவு நேரம் பகவா னைக கணடு களிககும்படி அன புடன் வேணடி னார. இது பகவான் பகதிககுக கொடுதத பரிசு. ஜாதி வெறியரகளுககுத தலையில் கொடுதத கொட்டு எனலாம்.

இவர் காலததில வாழ்நத அத்தனை பகதர்களும் இவரை அன்புடன் அரவணைததார் கள். இவரும் ஞானேஸ்வர ருடன் காமதேவரையும் முன் னிட்டு வடநாட்டு யாத்திரை சென்று வந்தார. இவரது தூய மையான அபஙகஙகள "வர காரி" சம்பிரதாயத்தில ஓர் உன னத இடததை அடைநதது.

பின்னாளில் சொகக மேளா வும் அவரைச் சார்ந்த சில மகர் ஜனஙகளும் ஒரு பெரிய சுவர் சாயநததால அதில அகப்பட்டு மாணடு விட்டாரகள். சுவர களை தோணடி எடுபபதறகுள அவரகளது உடலபு அழிநது காணமுடியாத அளவிறகு உருக குலைநது விட்டது.

எலலோரும சென்று நடநத விபரீததை நாமதேவரிடம முறையிட்டாரகள். சொககா வின சடலததைக காணமுடி யவிலலையே என்று வருநதி னாரகள். அதறகு அவர "எநத எலுமபு 'விட்டலா விட லா' என்று மெலலிய சத ததை எழுபபுகிறதோ, அது தான சொககாவினுடையது" என்று கூறியனுபபினார.

அதே முறையில அவ ரது எலுமபுகளைக கணடெ டுததுப் பணடரிநாதனின வாச லில் புதைதது புனிதமாககி னார்கள். சொககாவின் வாழ்க கையும், ஒவ்வொரு மூசசும், ஒவ் வொரு அணுவும் பண்டரிநா தனின் பக்தியில் திளைத்தது. இன்றும் அவர் "படியாய்க் கிடந்து" பண்டரிநாதனின் பவ ழவாய் கண்டு பரவசப்படுகி றார். அவர்தம் வழியில் நின்று, அவரைப் போன்று, அசைக்க முடியாத பக்தியில் திளைத்து பரமனை பாடுவோம், அவன் தூய பாதங்களை நாடுவோ மாக!



## நெஞ்சம்

இரக்கம் உளள நெஞசில அன்பு பிறக்கும்
நாணயம் உள்ள நெஞசில் அறம் பிறக்கும்
நன்மை தீமை தெரியும நெஞசில் மெயயுணர்வு பிறக்கும்
ஆணவம இலலாத நெஞசில மரியாதை பிறககும்

-கன்பூஷியஸ்.

தொகுத்தவர்: கமலா மாரியப்பன் - கோவை.

# நாரணன் நின்ற நாராயணவனம்

திருமதி. க. தங்கம் - சென்னை.

"அன்றிவ் வுலகம் அளந்தாய்
அடிபோற்றி!
சென்றங்கு தென்னிலங்கை செற்றாய்
திறல் போற்றி!
பொன்றச் சகடம் உதைத்தாய்
புகழ் போற்றி!
கன்று குணிலா எறிந்தாய்
கழல் போற்றி!
என்றென்றும் உன் சேவகமே
ஏத்திப் பறைகொள்வான்
இன்று யாம் வந்தோம்
இரங்கேலோரெம்பாவாய்"

"அவனின்றி ஓர அணுவும அசையாது" என்பதற்கேறப மனிதரகளை ஆட்டுவித்தும், அடக்குவித்தும், ஓட்டுவித்தும், ஒடுக்கு வித்தும், ஊட்டுவித்தும், காட்டுவிததும, பாட்டுவித்தும், எண்ணும் எழுத்துமாய், கண்ணும் கருத்துமாய் இருக்கும கடவுள் அவ்வப் பொழுது, ஒவ்வொரு யுகத்தில் ஒவ்வொரு அவதாரமாக எடுத்து துஷ்டர்களை அழித்து அன்பர்களை இரக்ஷித்து அருள் புரிந்து வருகின்றன.

சீனிவாச அவதாரமோ அழிக்கத் தோன்றியது அல்ல, வாழ்விக்கத்
தோன்றியதே என்பதற்கு எடுத்துக்காட்டாக அமைந்தது. இவ்வவதாரத்தில் "சொல் தவருமை, உலக நடைமுறையைக் காட்டல், தாயன்பு, தாயின் கடமை, கணவரின் கடமை, கடவுளின் கடமை" முதலியவற்றை அறிவுறுத்தி மக்களின் இன்னலைப் போக்கி இன்பத்தை ஊட்டுவதாக அமைகிறது.

"தரணி எங்குமே நாரணன் விளையாடட்டு" எனபதறகேறப பிருகு முனிவரின் செயலால் திருமகள திருமாலை விட்டு நீங்க, செல்வம் இழந்த நாரணன பொலிவிழந்து, வாழ்விழந்து. "நல மனைவி இழந்தார் பெறும இன்னலைப் பெறறு", தன மனையாளைத் தேடிப் பூவுலகிறகு வருகிருர். வந்தவர் அலைகிருர், திரிகிருர், மனம் வருந்துகிருர். மதயானையால் தாககுண்டவர் வகுள மாலிகா தேவியின் ஆசிரமத்தை அடைகிருர்.

வகுளமாலிகா தேவியோ மற்றைய பிறவிகளில் திருமாலுக்குத தாயாக இருந்து வளர்த்து பெரியவர் ஆக்கியவர். ஆனால் ஒரு பிறவியிலும் அவருடைய மண வாழ்க்கையைக் கண்டவளில்லை. அவள் தன்னுடைய ஆசையை நிறைவேற்ற வேண்ட, இராமாவதாரம், கிருஷ்ணுவதாரம் முதலியற்றில் நிறைவேருத ஆசையை வகுளமாலிகா தேவிக்கு 'ஸ்ரீனிவாசன்' அவதாரத்தில் நிறைவேற்றுகிருர். அதனை எவ்வாறு நிறைவேற்றினார் என்பதே கதையின் சாரமாகும்.

சீனிவாசர் அவதாரத்தின் சாராம்சமே பிற அவதாரங்களில் நிறைவேற்ற முடியாத, பிறருக்குக் கொடுத்த வாக்கைக் காப்பாற்றுவதே என்றுகூட கூறலாம்.

வகுளமாலிகா தேவிக்கு அருள் புரிதல், வேதவதியின் ஆசையை நிறைவேறறல, கலியுகம் பற்றியசெயல்களை மக்களுக்கு அறிவுறுத்தல, கலியுகத்தில் தோன்றும் அடங்கா ஆசைகளை நிறைவேற்றி மகிழ்வித்தல் எனலாம்.

நாரணன் மக்களில் மககளாய் தோன்றி வகுளமாலிகா தேவியால் காக்கப்பட்டு வேட்டைக்குச் செல்கையில் நாராயண வனக்காட்டை அடைகின்ருர். ஆகாச இராஜா பட்டணம் என்று வழங்கப்பட்டது இன்றைய நாராயணவனம். ஆகாச இராஜாவால் பல வருடம் தவமிருந்து மகப்பேறின்றித் தாமரைக் குளததில் கடவுள் அளித்த குழந்தையைப் பெற்றுப் போற்றி வளர்க்கப்பட்டவளே நம் பத்மாவதி அம்மையார் ஆவார். ஆகாச இராஜாவின் அந்தப்புர நந்தவனத்திலே தேவி தன் தோழியருடன் ஆடிப் பாடி மகிழ்ந்திருக்க, வேட்டைக்குச் சென்ற நாரணன் தேவியைக் கண்டு காதலுறுகின்ருர்.

கடவுள் கொண்ட காதல் களம் சிறப்புடையது "இந்நாராயணவனம்". காதல் மிகுதியால் ஊன ஊறக்கமின்றி, மனமிழந்த, செயலிழந்த கடவுள், தன் கருத்தைத் தாயிடம் கூற, தாயாரோ அனைத்தும் அவன் செயல் என்று கடவுள் கட்டளைப்படி பெண் கேட்டு ஆகாச இராஜாவிடம் செல்கின்ருர். பத்மாவதியின் தாயாரோ



ஸ்ரீகல்யாண வேங்கடேஸ்வரர் திருக்கோயில நாராயணவனம.

வேலையினறி இருககும ஒருவ ருககா தன மகளைத தருவது என்று ஐயுறுகின்றார.

கலியுகத தாய்மாரகள தன மகள கவலைப படககூடாது என நினைககும் கருத்தையும், கலியுகக் காதலர்களின் அவல நிலையையும், கடவுள தன நிலையில் உணர்த்துகிறார். பின்னர் நாரதர் மூலம் பத்மாவதியின் முந்தைய பிறப்பையும், மண வாழ்ககையையும் அறிவுறுத்துகின்றார். இறைவனே மணமுடிப்பான் என்றும் மணமகன் கிடைக்க வில்லையென்று கவலை வேண டாம் என்று அறிவுறுததுகின் றார. அதற்கேற்ப இறைவனும் குறததி உருக் கொண்டு வருகின்றார்.

குறி கூறுகின்றார். தன் குறிப்பை உணர்த்துகிறார். பத் மாவதியின முந்தைய பிறப்பில் "கடவுளை அடையக் கோரியவரம் இப்பிறப்பில் நிறைவேறுகிறது" ஒரு பிறப்பில செய்த பலன மறுபிறப்பும் தொடரகிறது. "ஒருமைககண் தான கற்ற கல்வி எழுமைககும் ஏமாபபு தருகிறது".

ஒரு பிறவியில் செய்த தவம் அடுத்த பிறவியில் பலிககிறது. "கடவுளே தேடியலைந்து மண முடிககின்ற" காட்சியால இது அறிவுறுததப்படுகிறது.

கணவனின வரத்தை நிறைவேற்ற மனைவியர துணை நிறக வேணடுமென்பதை "திருமகள அகலலும் பத்மாவதி மணம நிறைவும்" காட்டுகிறது.

கலியுகததில கடவுளும மணம் புரிய மிகக பணம் தேவைப் படுகிறது. திருமகளை நீங்கிய திருமால, பணமின்றிக் குபேரனிடம் கடன வாங்குகிறார். கடனை அடைக்க தன்னிடம் குறை கோரி நிறக வேண்டி வரும பகதனின் காணிககையை வட்டியாகப் பெற்றுத் தருகினறார் என்பது சம்பரதாயம். கடன் பெற்றவன வடடியை அடைததலே சரியாக இருககுமெனபதறகுக கடவுளின செயலே காடடாக அமைகிறது.

நாராயணவனததில வேட டையைத தொடங்கி, காதல கொணடு, வையல உறறு, கடன பெறறு, மணம பெறறு நிதய கலயாண வேங்கடேசராக அமரநத தலமே நாராயணவ னமாகும். இங்கு பதமாவதி தோனறிய பதமசரஸ் என்ற குளமுணடு பதமாவதி வாழநத ஆகாச இராஜா மாளிகை இருநத இடமும உணடு. பத மாவதி மணததிறகு வநத வரகளுககு இறைவன அளிதத விருநதில் அமைநத சாமபார, இரசம் போனறவை இருநத இட மான குட்டைகளும, மாவரைதத இயநதிரமும, இன்றும நாராய ணவனததில காட்சிப பொரு ளாக இருககினறன. கடவுளோ நிதய கலயாண வேஙகடேச ராக கங்கணக கையுடன தின மும் இன்று வரை மணககோ லததுடன வாழகினறார. இத தலம் புத்தூர இரயில நிலை யததினினறு ஐநது கிலோ மீட்டர தூரத்தில உள்ளது. திருமலை திருப்பதி தேவஸ் தானத்தினரால் சிறப்பாகப் போற்றிக் காக்கப்பட்டு வருகிறது. மிக உயர்ந்த கோபுரம, மலை சூழநத இயற்கை அரண், மனதிற்கு இன்பம் தரும் மணக் காட்சியுடன் இன்பமளிக் கும் இறையைக் கண்டு, இன் பம பெற நீங்களும நாராயண வனம் ஒருமுறை சென்று வந் தால் இன்பம் கிட்டும் என்பதை அனுபவிததுப் பலனடையுமாறு வேண்டுகிறேன்.



# இந்து தர்மமும் சமயப் பத்திரிகைகளும்

**'எல்லோரா'**



"வேதோகிலோ தரம மூலம்" என்று கூறுவதற்கேற்ப இந்து தர்மத்தின் அடிப்படையாக வேதங்கள் திகழ்கின்றன. இந்திய மண்ணின் பெருமையும், ஆற்றலும் வேத உபநிஷத்துக்கள், புராண இதிஹாஸங்கள் ஆகியவற்றின் மீதே ஆதாரப்பட்டுள்ளன. அதுவே உலக சமய உலகில் இந்து சமயத்தின் சிறப்பைத் தனியே இனங்காட்டி வருகின்றது. வேதங்களின் கருவாக விளங்குவது 'ஓம்' எனும் ஓங்காரமாகும். ஒலிகளின் ஊற்றாக, மொழிகளின் இருப்பிடமாக, முத்தெய்வங்களின் மூலமாக, பிரம்மத்தின் இருப்பிடமாகத் திகழ்வது ஓங்காரமாகும். இந்து சமயத்தின் சிறப்பினை எதிரொலிப்பது ஓங்காரமாகும்.

[உலக , நாகரீக வாழ்வின் தொட்டிலாக விளங்குவது நமது இந்திய மண்ணின் கலாசாரமாகும். இக்கலாசாரத்தின் பெருமையானது வாழ்க்கை நெறியினையும், மனித இனத்தின் மேன்மையினையும் படம் பிடித்துக்காட்டும் நமது இந்து சமயத்தின் மீதே சார்ந்து வந்துள்ளது. நமது சமயம் எனும் மாளிகை வேதங்கள் காட்டிடும் தர்மத்தின் தூண்களின் மீதே கட்டுப்பட்டுள்ளது. இத்தகு ஆற்றல்மிகு தர்மத்தின் பெருமை சாமான்யரும் அறிய வேண்டுமெனறுல், அப்பணி, இன்றைய நிலையில் சமயப்பத்திரிகைகளால் மட்டுமே முடியும்.]

ஸத், சித், ஆனந்த சொரூபமான அந்த இறைவனை அறிதலே வாழ்க்கையின் பயனாக ஆன்றேர் கூறிப்போந்தனர். வேதகாலந்தொட்டு, ஸ்ரீரமண மகரிஷி காலம் வரை அப்பரம்பொருளின் பேரருளில் திளைத்து, ஞான அறிவு பெற்று அவ் இறை இன்பத்தில் மூழ்கித் திளைத்த நாயன்மார்கள், ஆழ்வார்கள் போன்ற மெய்யடியார்கள் அவ்இறைவனின் பிரதிநிதியாக இம்மண்ணில் வாழ்ந்து, இறையுண்மையை, முக்திப் பாதையினை நமக்கு தங்கள் பாக்களாலும், வாழ்க்கை முறையாலும் விளக்கிச் சென்றுள்ளனர். கர்ம மார்க்க வழியாக ஞானமார்க்கத்தினைச் சுட்டிக் காட்டி,

பக்தி மார்க்கத்தின் சிறப்பினை, எளிமையினை விளக்கினர் அச் சமயச்சான்றோர்கள்.

அத்தகு பெருமைமிகு இறைவனின் பேருண்மையையும், அவ் இறைவனையும், மனிதர்களையும் இணைத்திடும் ஆன்மீகப் பாலமாக விளங்கிட்ட மெய்யடியார்களின் சமயத்தொண்டினையும் அவர்தம் அருளுரைகளையும், நாளும் பிரச்சனைகளால் சூழப்பட்டிருக்கும் இன்றைய மனிதன் அறிந்து தெளிவதற்கு வழிகாட்டியாக அமைவன சமயப்பத்திரிகைகளாகும்.

இந்த நிலையில் இன்றைய சமயப்பத்திரிகைகளின் நிலை என்ன? அவற்றின் பொறுப்பு என்ன? குறிககோள்கள் யாவை? அவை காட்டும் சமய வழி எது? மேற்கொள்ள வேண்டிய வழிமுறைகள் என்ன? என்று பல கேள்விகளுககுப் பதில் காண வேண்டிய நிலையில் இன்று நாம் இருக்கிறோம். தினசரிகள், வார இதழ்கள், மாதப்பத்திரிகைகள் என்று பலவும் வெளிவந்து கொண்டிருக்கும் இன்றைய பத்திரிகை உலகில் சமயப்பத்திரிகைகளின் கடமை என்ன என்பதையும் சற்றே பார்க்க வேண்டும். விஞ்ஞான வளர்ச்சியின் உச்சியில் இருந்து வரும் இன்றைய நாளில் மக்கள் தொடர்பு என்பது ஒரு விரைவான, எளிதான முயற்சியாக விளங்கி வருகிறது. உலகத்தின் நான்கு மூலைகளில் நடந்து வரும் செய்திகளானது விரைவில் மக்களைத் தேடிச்செல்லும் வகையில், கணிப்பொறி உலகம் ஒரு பேரதிசயத்தையே உருவாக்கி வருகின்றது. அதனை பத்திரிகை உலகம் மிக நன்றாகவே பயன்படுத்தி, அதில் வெற்றியும் கண்டு வருகின்றது. இவ்வகையில் விஞ்ஞான உலகத்தின் விந்தை வளர்ச்சி மானிட இனத்திற்குப் பெரிதும் உதவிடும் போது, மனிதனானவன் கோபம், பொறாமை, சோம்பல், நேர்மையின்மை முதலியவற்றால் தாக்குண்டு குழப்பங்களின் இருப்பிடமாக, பிரச்சனைகளின் பிறப்பிடமாக இருந்து வருவது வேதனைக்குரிய விஷயமாகும்.

நம் பிரச்சனைகளுக்குத் தீர்வாக அந்த விஞ்ஞானத்தையே அழிவுக்குப் பயன்படுத்துகிறோம். நம் அழிவுக்கு நாமே வழி கோலுகின்றோம். இந்த அறியாமையிலிருந்து விடுபட, மெய்ஞ்ஞானம் அதாவது சமய உணர்வே நமக்கு வழிகாட்டியாக, உறுதுணையாக அமைகின்றது. இந்த நிலையில் நமக்கு உதவுவது நமது வேதங்களும், 'உபநிஷத்துக்களும், புராண இதிஹாஸங்களும் மற்றும் பல சமய இலக்கியங்களுமேயாம். மனிதர்களின் சிந்தனையிலும், செயலிலும் அச்சமய உணர்வு வற்றாத ஊற்றாக அமைய வேண்டுமாயின் சமயம் கூறும் கருத்துக்கள், வாழ்க்கை உண்மைகள் எளிதாகவும், விளக்கமாகவும் மக்கள் நடுவில்பரப்பப்படவேண்டும். அப்போது தான் இம்மண்ணில் பிறந்திட்ட இந்து சமயத்தின் பெருமையும், அருமையும் இம்மண்ணில் பிறந்தோர் அறிய வாய்ப்பு ஏற்படும். அச்சமயத்தை அறிந்து தெளிந்தால் தான், அச்சமயத்தின் மீது அவனுக்குப் பற்றும் பாசமும் ஏற்பட்டு, அவன் தன் பிறவியைப் தனக்கும், பிறர்க்கும் பயனுள்ளதாக அமைத்துக் கொள்ள முடியும். பாலில் நெய்யாக மறைந்துள்ள நமது சமய நூல்களில் பொதிந்துள்ள வாழ்க்கைப் பாடங்களை நாம் எளிதாக அறிய வேண்டுமென்றால், அதற்கு நவீன விஞ்ஞான வளர்ச்சியுடன் வளர்ந்திட்ட பத்திரிகை உலகம்தான் பெரும் அளவில் உதவி புரிந்திட முடியும்.

ஆடம்பர, போலி வாழ்க்கையில் மூழ்கிவிட்ட இன்றைய மனிதனின் மனப்போக்குக்கு ஒரு தடை விதிக்கப்பட வேண்டுமாயின், அவனை நல்வுலகிற்குக் கொண்டு வரவேண்டுமாயின், வாழ்க்கை உண்மைகளை உணர வைக்க வேண்டுமாயின், சமயக் கருத்துக்கள் நவீன முறையில் அவனை ஈர்த்திடவேண்டும். அவன் சமயத்தை எளிதாக அணுகிட வேண்டும். அதற்கு ஆன்மீகத் தாகம் அவனுள் ஏற்பட வேண்டும். அதற்குமுன்பு அவன் மனமும் அறிவும் பண்படவேண்டும்.

ஆம், இம்மண்ணின் கலாசாரத்தின் பெருமை, சமயத்தின் சிறப்பு ஆகியவற்றை அவன் உணர வேண்டும். அவற்றை அறிய அவன் ஆவல்கொள்ள வேண்டும். அதற்கு அவற்றைப் பற்றிய தகவல்கள, முன்னுரைகள் மக்களிடையே பரப்பப்பட வேண்டும். சமய அறவுரைகள் விளக்கப்படவேண்டும்.

வேற்றுச் சமயத்தார் தங்கள் சமயப்பரப்புக் கொள்கைக்காகவும், செயல் திட்டங்களுக்காகவும், இந்தியாவில் லக்ஷக் கணக்கான பணத்தைச் செலவிட்டு வருகின்றபோது, நாம் நம் நாட்டில் நமது சமயக்கொள்கைகளை தீவிரமாக, ஆக்கப்பூர்வமாகப் பரப்புவதற்குத் தகுந்த முயற்சிகளை மேற்கொள்வதில் தவறேதுமில்லையே. இன்னும் கூறப்போனால் இன்னும் தீவிரமான ஆற்றலுடன் மேற்கொள்ளப்படவேண்டிய முயற்சி இது

ன்றே கூறவேண்டும். நவீன சாதனங்களின் மூலம் விரைவாக மக்களுடன் தொடர்பு கொள்ளக்கூடிய இக்காலக் கட்டத்தில், நமக்குத் தேவை சரியான திட்டமும், தீவிர நாட்டமும், கொள்கைப்பிடிப்புமேயாகும். இந்நிலையில் சமயத்தையும், சாமானயனையும் இணைத்திடும் பாலமாக பத்திரிகைகள் விளங்குகின்றன. இந்நாட்டில் பத்திரிகைகளுக்குக் குறைவில்லை. ஆனால் ஆன்மீகத் தாகத்தினைத் தீர்த்திடும், பக்தி உணர்வினைத் தட்டி எழுப்பிடும் சமயப் பத்திரிகைகள் பொதுவாக நாட்டில் குறைவாகவே உள்ளன என்றே கூறவேண்டும். இது நமது பலவீனத்தையும், குறையினையே படம் பிடித்துக் காட்டு கினறது.

இந்தியக் கலாசார மேம்பாட்டினையும், இந்து சமயத்தின் உன்னதத்தையும் பரப்பும் பணியில் இன்றைய இந்து சமயத்தலைவர்கள் தங்களை முழுமையாக ஈடுபடுத்திக்கொள்ள வில்லை என்றே கூறவேண்டும். மக்களிடையே சமய உணர்வினைத் தட்டியெழுப்பும் பணியில் அவர்கள் மெத்தனமாகவே இருக்கிறார்கள். செடியை நட்டால் மட்டும் போதாது. அதற்கு காலந்தவறாமல் நீரிட்டு, தகுந்த உரமிட்டு, வேலி அமைத்து மரமாகும்வரை பாதுகாத்து வளர்த்திட வேண்டும். கனியினை அது தானாக தந்திடும். அந்த பாதுகாத்து வளர்த்திடும் காலக் கட்டமே அச்செடிக்கு முக்கியமானது. அதனைத்தான் சமயப் பெரியோர்கள் மேற்கொள்ளவேண்டும். அப்போது தான் பிற சமயத் தாக்குதல் களினின்று, சூழ்ச்சிகளினின்று, அத்து மீறல்களின்று இந்து சமயம் தன்னை விடுவித்துக் கொள்ள முடியும். மதவாதிகள், ஆதாயம் தேடும் அரசியல்வாதிகள் போன்றோரை இனங் கண்டு, தன்னைப் பாதுகாத்துக்கொள்ளும் இந்தக் காலக் கட்டமே நமது இந்து சமயத்திற்கு ஒரு சவாலாகவே உள்ளது. மூடநம்பிக்கைகள், தவறான தத்துவ விளக்கக்கோட்பாடுகள் போன்ற மேடுபள்ளங்களினால் நமது இந்து சமயம், ஒரு மாநதி பல கிளை நதிகளாகப்பிரிவது போன்று, பல உட்பிரிவுகளுக்கு ஆளானது. இதுபோது என்ன செய்து கொண்டிருக்கின்றோம்? நாம் என்ன செய்ய வேண்டும்? என்ற வினாக்களை எழுப்பிக்கொண்டால், நாம் நமது பெருமையை அறிந்து கொள்ள வில்லை. நன்றாக உணர்ந்து செயல்படவில்லை என்பதே அதற்குப் பதிலாக அமையும். இம்மண்ணிற்கே உரிய சகிப்புத் தன்மை எனும் குணத்தால், நம் மிடையே நிலவும் ஒற்றுமையில் வேற்றுமை பாராட்டும் உணர்வால் நாம் பிற சமயத்தாக்குதல்களுக்கு வழி வகுத்தோம். நமது குறைகளை, பலவீனங்களை அறிந்து அவற்றை நம் மிடமிருந்து களையவேண்டும். அப்போதுதான் அமைதியான, ஆற்றலுள்ள, அன்பு மிக்க, மகிழ்ச்சியுடன் கூடிய வாழ்க்கையை நாமும் நம் சந்ததியினரும் பெற முடியும். அதற்கு இந்து சமயக் கருத்துக்கள், சிந்தனைகள் நம்மிடையே, குறிப்பாக இளைய தலைமுறையினரிடையே எளிதாக, விரைவாகப் பரப்பப்படவேண்டும். இப்பணியை இன்றைய சமயப் பத்திரிகளைகள் தாம் செவ்வனே ஆற்றிடமுடியும்.

## சமயப் பத்திரிகைகள்

முதலில் சமயப் பத்திரிகைகளின் பொறுப்பும், கடமையும் என்ன என்பதைச் சற்றே பார்த்தல் வேண்டும். இந்தியாவில் முதன்முதலாக 1818-இல் 'திக்தர்சன்' எனும் பெயரில் வங்க மொழியில் சமயப்பத்திரிகை ஒன்று வெளிவந்தது. அதற்குப் பிறகு, 1835இல் 'சத்ய தூதா' எனும் கிறித்துவ சமயப் பத்திரிகை ஒன்று வெளிவந்தது. பின்னர் சென்னையைச் சார்ந்த பிரம்ம சமாஜத்தினரின் 'தத்துவ போதினி' எனும் பத்திரிகை 1864-இல் வெளிவந்தது. ஆனால் அன்றைய சமயப் பத்திரிகைகள் பெயரளவில் மட்டுமே சமயத்தைப் பற்றிக்கூறின. பெரும்பாலும் அவை சமூக, இலக்கிய, கலாசார சம்பந்தமான விஷயங்களையே கொண்டனவே தவிர, சமயக் கருத்துக்கள் ஒரு சிறு பகுதியே இடம் பெற்றன. சமயத்திற்கென்று விரல்விட்டு எண்ணக் கூடிய வகையில் ஒரு சில பத்திரிகைகளே மக்களிடையே வலம் வந்தன. அன்றாடம் பல பிரச்சனைகளால் தாக்கப்பெறும் மனிதனுக்கு, சமூகச் சீர்த்திருத்தம், இலக்கியம் சம்மந்தமான கதை, கட்டுரைகளைத் தாங்கிவரும் பத்திரிகைகள் ஒரு தீர்வாக அமைய வில்லை. மற்றையப் பத்திரிகைகள் அன்றாடம் நடைபெறும் நாட்டுநடப்புகளை நேரிடையாகவும், மறைமுகமாகவும் எழுதிக்காட்டினவே தவிர, மனிதனுக்குத் தேவையான மனயமைதியினையோ, நம்பிக்கையினையோ தரவில்லை. இதுபோது இறை நம்பிக்கையே அவனுக்கு ஒரு வழிகாட்டியாக, உற்ற துணையாக அமைந்திட்டபோது, சமயப் பத்திரிகை

களின் இன்றியமையாமை உண ரப்பட்டது. சமயமும் வாழ்க் கையும் வேறு வேறு என்றில லாது, தன்னுள்ளேயே இறைவ னைத் தரிசித்திடும் ஒரு உன் னதமான சமயக் கொள்கையி னைக் கொண்ட இந்து சமயக் கருத்துக்கள், அவன் வாழ்க் கைக்கு இலக்கணமாகத் திகழ் கின்றன. அதுவே இம்மண் ணின் பெருமையாக அமைந் தது. அத்தகு பெருமைமிகு சனாதன தர்மமான இந்து தர் மத்தின் அறவுரைகள் உரிய காலத்தில், உரியவர்க்கு விரை வாக, விளக்கமாகக் கிடைத்திட சமயப் பத்திரிகைகள் ஒன்றே நமது ஒரே நம்பிக்கைச் சாதன மாக விளங்குகின்றன.

இந்து சமயம் பல பிரிவுக ளைத் தன்னகத்தே கொண்டு விளங்குவதால், 'வேற்றுமையில் ஒற்றுமை' எனும் உயர்கொள்கை யின் பின்னணியில், அப்பிரிவுக ளின் தனித்தன்மையை மக்களி டையே தெளிய வைத்து, இந்து மதத்தின் அடிப்படை இலக்கண மான நமது சமய இலக்கியங் களின் ஆற்றலை, மேன்மையை உணர்த்திடும் வகையில், நமது இன்றைய சமயப் பத்தி ரிகைகள் விளங்குதல் அவசி யம். அதற்குச் சமயக் கருத்துக் கள் திட்டமிட்டு, பெருமளவில், விளக்கப்படவேண்டும். இதன் விளைவாக இந்திய மொழி களில், குறிப்பாகத் தென் னிந்தியாவில் பல பெயர்களில் சமயப் பத்திரிகைகள் இன்று பெருமளவில் வெளியிடப்பட்டு, தங்கள் கடமைகளை பொறுப்பு டன் மேற்கொண்டு வருகின்றன என்றே சொல்ல வேண்டும். தமிழில் திருமால், ஸ்ரீவைஷ் ணவ ஸுதர்சனம், ஸ்ரீராம கிருஷ்ண விஜயம், தரும சக் கரம், திருக்கோயில், கடவுள், ஞான ஒளி போன்ற சமய இதழ்கள் அவரவர்களுடைய பாணியில் நின்று, சிறந்த எழுத் தாளர்களின் படைப்புகளைக் கொண்டு, பிரசுரிக்கப்பட்டு வரு கின்றன.

இந்த வகையில் திருவேங் கடவன் திருவருளால் சுமார் 50 ஆண்டுகளாக வெளியிடப் பட்டு வந்த சமயப் பத்திரிகை, 1970 முதல் 'ஸப்தகிரி' எனும் பெயரைத் தாங்கி வரும் சமயப் பத்திரிகை உலகில் குறிப்பிடும்ப டியான இடத்தைப் பெற்றுவரு வது மகிழ்ச்சிக்குரியது. சமயப் பிரிவுகள் பாகுபாடின்றி, சமயக் கருத்துக்களை- வேதங்கள், புரா ணங்கள், இதிஹாஸங்கள் மெய் யடியார்களின் வாழ்க்கை மற் றும் அவர்கள்தம் பாடல்கள், இலக்கியங்கள்- ஆகியவற்றின் பின்னணியில் - விளக்கமாக, எளிதாக தகுந்த எழுத்தாளர் பெருமக்களைக்கொண்டு, புதிய எழுத்தாளர்களை ஊக்குவித்தும் தன் சமயத் தொண்டினை சீரும் சிறப்புமாகச் செய்து வரு வது ஸப்தகிரியின் பெருமை யைப் பறைசாற்றுகின்றது. ஆனால் ஸப்த கிரியின் பணி - கடமை இத்துடன் நின்றுவிட வில்லை என்றே கருதுகிறேன்.

இந்து சமயத்தின் எல்லா உட்பிரிவுகளைச் சார்ந்த சமயத் தலைவர்கள், ஆன்மீகச் சொற் பொழிவாளர்கள், சமய, கலா சார அமைப்புகளின் தலைவர் கள் போன்றோரை ஒரே மேடை யில் தோன்றச் செய்து, சமய விழிப்புணர்வினைத் தோற்று விக்கும் வகையில், கருத்தரங் குகளும் உரைக் கோவைகளும், பட்டிமன்றங்களும் நடைபெற வேண்டும். இவற்றை 'ஸப்த கிரி', ஏற்கனவே சமய நிகழ்ச் சிகளை பலவாறு நாடெங்கி லும் நடத்திச் சமயத்தொண் டினை ஆற்றி வரும் தி.தி. தேவஸ்தானத்தாரின் 'தர்ம பிர சார பரிஷத்' அமைப்பின் மூலம் மேற்கொள்ள வேண் டும். அதற்குத் திருவேங்கடவ னின் திருவருளும், பொருளும் தங்குதடையின்றி கிடைத்திடு வதால், 'ஸப்த கிரி' இம்மு யற்சிகளை முறையாக, தீவிர மாக மேற்கொண்டால் அதுவே ஒரு சமயப்பத்திரிகையின் ஆற் றலை, குறிப்பாக ஸப்தகிரி யின் முக்கியத்துவத்தை, தி.தி. தேவஸ்தானத்தின் பெருமையை மேலும் உயர்த்தும் என்பதே என் பணிவான கருத்தும் எதிர் பார்ப்புமாகும்.

(தெலுங்கிலிருந்து தமிழாக்கம்:
-உமாராம்)

☆ ☆ ☆

## உள்ளம்

உன் உள்ளத்தைப் பண்படுத்திக்கொள். அதற்காகக் கான கம் செல்லத்தேவையில்லை. உள்ளமாகிய தனி ஆசிரமத்தில், அந்த மோனக்குடிசையில் அமர்ந்து, அற்ப ஆசைகளுக்கும், அற்ப விஷயங்களுக்கும் இடமளிக்காது உயர்ந்த சிந்தனை செய்.

-மார்க்கஸ் அரேலியர்.

தொகுத்தவர்: திருமதி. கமலா மாரியப்பன் - கோவை.

யத்பாதாம் போருஹத்யாந
வித்வஸ்தாசேஷகல்மஷா
வஸ்துதாமுபயாதோஹம்
யாமுநேயம் நமாமிதம்.

“எவருடைய திருவடித்தாமரைகளை தியானம் செய்வதால் எல்லாவிதமான தோஷங்களும் நீங்கப்பட்டு யான (ராமாநுஜர்) ஒரு பொருளாக ஆனேனோ அந்த ஆசார்யரான யமுனைத் துறைவரை வணங்குகிறேன்” என்ற ஆசார்ய வந்தனத்துடன் தமது கீதாபாஷ்யத்தைத் தொடங்குகிறார் ஸ்ரீராமாநுஜர்.

“பஞ்சாசார்ய பதாச்ரிதர்” என்ற பெருமைபெற்ற ராமாநுஜருக்கு ஒரு பெருமை உண்டு. அவர்களில் பெரிய திருமலை நம்பி மற்றும் ஆளவந்தார் ஆகிய இருவருடைய ஈடுபாட்டை திருவேங்கடமுடையான் விஷயமாக அனுபவிப்பதே விஷயமாக மேலே தொடர்கிறேன்.

திருமலையில் பிறந்து திருவேங்கடமுடையானுக்கு நித்ய திருவாராதனத்திற்குத் தேவையான தண்ணீரை பாபவினாசத்திலிருந்து கொண்டு வந்து சமர்ப்பிக்கும் கைங்கர்யத்தில் ஈடுபட்டு வந்தவர் பெரிய திருமலை நம்பிகள். ஒருநாள் வழக்கப்படி நீர் கொண்டு வரும் சந்தர்ப்பத்தில் வழிப்பட்ட ஒரு வேடன் தனது தாகத்தைத் தீர்த்துக் கொள்வதற்காகத் திருமலை நம்பிகளிடம் தீர்த்தம் கேட்க, திருமலையப்பன் திருவாராதனத்திற்காகக் கொண்டு செல்லும் தீர்த்தத்தைக் கொடுக்க மறுத்ததாகவும் தெரிகிறது. அந்த வேடன் நம்பிகளுக்குப் பின்னால் சென்று அவருக்குத் தெரியாமல் நீர் குடத்தில் அம்பினால் ஒரு ஓட்டை செய்து அதன் மூலம் வெளிவந்த தண்ணீரைத் தன் கைளால் ஏந்தி பருகினான். நீர் குறைவாலே குடத்தின் கனம் குறைவதைக் கண்ட நம்பிகள் திரும்பிப் பார்த்து நடந்தவற்றை புரிந்து கொண்டு அந்த வேடனையும் கோபித்துக்கொண்டார். பெருமாள் கைங்கர்யத்திற்கு அமைந்த நீரை வேடன் தனது தாகத்தைத் தணிப்பதற்கு உபயோகப்படுத்தியதை மனம் நொந்து அவனையும் கண்டித்தார். அந்த வேடன் நம்பிகளை நோக்கி ‘ஏற்பட்ட அபசாரத்திற்கு தேவரீர் விசரப்படவேண்டாம். இந்த இடத்திலேயே ஒரு நீர் நிலையைக் காட்டுகிறேன்’ என்று சொல்லி ஒரு கல்லில் தமது அம்பை எய்தி அவ்விடத்தில்

# திருவேங்கடமுடையானும் ஆளவந்தாரும்

திரு. K.A. பார்த்தசாரதி - சென்னை.



ஒரு நீரப்பெருக்கைக் காடடிககொடுதது அதிலிருநது நீர கொணடு சென்று திருவேங்கடமுடையானுடைய கைங்கரயததை நடததிவைககுமபடி கேட்டுககொண்டான். அவ்வாறு வேடனாகத தோனறியவன திருவேங்கடமுடையானே எனபதும் அவர்கள காட்டிககொடுத்த நீர நிலையே பிறகு ஆகாச கஙகை என்று பிரசித்தி பெறறது என்பதும சரித்திரப் பிரஸித்தம்.

இந்த நிகழ்சசியை வெளியிடுவதாக அமைந்ததே திருவேங்கடமுடையான் கண்டருளும் உத்சவங்களில் மார்கழி மாதம் நடைபெறும் அத்யயந உத்சவத்தின் கடைசி நாள். பெருமாளும் ராமாநுஜரும் ஆகாச கங்கைககு புறப்பாடாக எழுந்தருளி அங்கிருந்து தீர்த்தத்தை எடுத்துக் கொண்டு ஸ்ரீவைஷ்ணவர்கள் பெரியதிருமொழியை கோஷ்டியாக அநுஸந்தித்துக்கொண்டு வீதி வலமாக கோயிலை வந்து அடைந்து அந்த ஆகாச கங்கை தீர்த்தத்தினால் திருமஞ்சனம் கண்டருளும் உத்சவம் கொண்டாடப்படுகிறது. இதனையே "தண்ணீர் அமுதுவழி திருத்துதல்" என்ற பெயரால் விவரிக்கப்படுகிறது.

திருமலையில் 14 தீர்த்தங்கள் பிரஸித்தமாக இருக்க, பாபவிநாசம் மற்றும் ஆகாச கங்கை இவற்றிலிருந்து கொண்டு வரபபடும் தண்ணீரே திருவேங்கடமுடையான் திருவாராதனத்தில் உபயோகப்பட்டுவருகிறது.

இதுவரை பெரியதிருமலை நம்பிகள் திருவேங்கடமுடையான் கைங்கர்யத்தில் ஈடுபட்ட விஷயத்தை விவரித்து மேலே ஆளவந்தார் விஷயமாக சிறிது அனுபவிக்கலாம்.

திருமலை கோயிலுககு உள அடஙகி இரணடு கிணறுகள இருபபது யாவருமறிநததே. அதில ஒன்று "பூங்கிணறு" இநதக கிணறறில பூமிப பிராட்டியார சமபநதம ஏறபட்டிருபபதால தினமும திருவேங்கடமுடையானுககு சாததபபடும துளஸி மறறும மாலைகள மறுநாள. பூமிதேவிககாக இநதக கிணறறில சேரககபபடுவதாக ஒருவழககம நடைபெறறு வருவதை நாம காணலாம. பக்தர்களுக்கு துளஸியை பிரசாதமாக கொடுக்கும் வழககம் இந்தக் கோயிலில் கிடையாது என்பது இந்த அடிப்படையிலேயே.

மற்றும் ஓர் கிணறு ஸ்ரீதேவிக்காகவும் அமைககப்பட்டுள்ளது. கோயில் திருமடைப்பள்ளிக்கு அருகில் இருக்கிறது இந்தக் கிணறு. பகவானுடைய நிவேதனத்திற்குக்குரிய பிரசாதங்களை இந்தக் கிணற்று நீரைக் கொண்டே தயாரிக்கப்படுகிறது. ஒருநாள் மிகப்பெரிய மழை பெய்ததால் பெரிய திருமலை நம்பிகள் பாபவிநாசத்திற்குச் சென்று நீர் கொண்டு வர முடியவிலலை அவவாறு நீர் வராததால திருவாராதனததிறகு காலதாமதம ஏறபடுகிறது அநத சமயம ஆளவநதார எனகிற பரமாசாரியார திருமலையபபனை சேவிகக வநதிருககிறார. பாபவினாசததிலிருநது கொணடு வரபபடும தீரததம தவிர வேறு எநத நீரும பகவானுடைய திருமேனிககு ஆரோககியமாக அமையாது, என்று புரிநது கொணடார ஆளவநதார. உடனே ஸ்ரீதேவியைப பிராரததிததார. பாபவினாசம தீரததம் போல இநதக கிணறறு நீரும் பகவானுககு ஆரோக்யமாக அமையவேணடும் என்று பிராரததித்தார. அநத பிராரததனைக்குப் பிறகு தாமே அந்த கிணறறு நீரைக கொணடு அன்றைய திருவாராதனத்தை நடத்திக்கொடுத்தார் என்று சரித்திரம் கூறுகிறது. அதுமுதலாக இநதக் கிணற்று நீரும் திருவேங்கடமுடையான் திருவாராதனத்திற்கு ஏற்றுக்கொள்ளப்பட்டது. இநத கிணற்றிற்கு "பொற்கிணறு" அல்லது "அழகப்பிரான கிணறு" என்று பெயர் ஏற்பட்டது.


வனனமலை முருகன் கோயில் - கரூர்.

# மனம் பெற்ற அறிவு

ஒருநாள சூரியன உதிககாமல மறியல செய்தான். ரிஷிகளும முனிவரகளும, தேவரகளும, கநதரவரகளும் கையைப் பிசைநதனர. வானமும சூரியனின இநத முடிவைக் கண்டு அயரநது போயிறறு. இதைக கேளவியுற்ற நித்ய கன்னியான புவியனனை மனப்பசுமையோடு சூரியனை நோக்கி "ஏன இநத கோபம்?" எனறு கேடடாள.

"ஏனா?" சீறினான கதிரவன.

"இநத மனிதன என்ன நினைத்துககொண்டிருக்கிறான்? அநாதி காலமாக இந்தப பயல என்னை வழிபட்டு வந்தவன் இன்று என்னைத் "தீப்பந்து" என்கிறான். இந்த நன்றி கெட்டவனுககு நான் ஏன் கிரணத்தைப் பாய்ச்சி ஒளிகாட்டவேண்டும்?" என்று மிகக்கோபமுடன் கேட்டான்.

கேட்ட புவியன்னை சிரித்தாள்.

"என்ன சிரிப்பு வேண்டியிருககிறது?" என எரிந்தான் ஆதவன். "உன்னைப் பெரிய மனம் படைத்தவள் என்று எண்ணிக்கொண்டிருநதேன். நீ இவ்வளவு சிறிய அறிவு படைத்தவன் என்பது தெரியாமல் போய்விட்டது. அதை நினைத்து சிரிக்கிறேன்" என்றாள் புவியன்னை.

விழித்தான் கதிரவன.

"அறிவின் வேலை எப்போதும் கல்லெறிவதுதான். இது உலகம் தோன்றிய நாளாய் நடக்கும் நடப்பு. ஆனால் மனத்தின் வேலை அத்தனையையும் சகிப்பது. மனம் ஒரு கடல். அறிவு ஒரு கல். கல்லைக் கடலில் போட்டால் என்ன ஆகும்?"

"முழுகிப்போகும்."

"மனத்தை வேகாத குடமாக்கிக் கொண்டால் அறிவு என்னும் சிறு கல் பட்டாலே அது உடைந்து சிதறிப்போகும். நீ என்ன வேண்டுமானாலும் செய். மனத்தை மட்டும் சுருக்கிக் கொள்ளாதே! குறுக்கிக்கொள்ளாதே!" என்றாள் புவியன்னை.

எத்தனை விசால மனம் படைத்தவள் புவியன்னை.

அவளிடமிருந்து நல் உணர்வு பெற்ற கதிரவன் தெற்காகவும் வடக்காகவும் மாறி மாறித் தன் கதிர்களைப் பாய்ச்சலானான். அன்று முதல் உத்தராயணமும் தக்ஷிணாயமும் தோன்றக்காரணமான புவியன்னை மகிழ்ச்சியால் பொங்கித் திளைக்கும் காரணம் இதுவே.

தொகுப்பு:கவிஞர் நீ.த. வெங்கட் - சென்னை.

பாபவினாசம், ஆகாசகங்கை அல்லது பொற்கிணறு இவற்றிலிருந்து கொண்டுவரப்படும் தண்ணீரே திருவேங்கடவனுடைய திருவாராதனத்தில் கொள்ளப்படும் என்பது கோயில் ஒழுகு, மற்றும் ஸ்ரீவேங்கடாசல இதிஹாஸமாலா போன்ற நூல்கள் மூலம் நாம் அறிந்து கொள்ளலாம். ஆளவந்தார பெருமையை விளக்கவந்த ஒரு ஸ்லோகத்தின் பொருள் கீழ்வருமாறு:

"மலையரசன் மகளான பாரவதியின் தளிர் அடி வைப்பினாலே சிறந்து விளங்கும் தாழ்வரைகளையுடைய இமய மலை முதல், அரக்கனால் அபகரிக்கப்பட்ட சீதாபிராட்டியின் முகம் மலர்வதற்கு காரணமான ஸேது வரையிலும், சந்திர சூர்யர்கள இருவரையும் தலையலங்காரமாகக் கொண்ட உதய அஸ்த்தமன கிரிகைகளுக்கு இடையிலும் பூர்வ, உத்தரமீமாம்ஸ சாஸ்த்திரங்களிலும் விசேஷமாக பயிற்சியினாலே மயர்வற்ற நெஞ்சையுடைய என்னைப்போன்று மற்றொருவன் தேடப்படட்டும்" (தேடினாலும் கிடைக்கமாட்டான்).

காஞ்சி மாமுனிவர் இந்த ஸ்லோகத்தில் மிகவும் ஈடுபாடு கொணடவர் என்பது ஸ்ரீமான் காஞ்சி P.B.A. ஸவாமிகள் தானே எழுதிய தன் சரிதை மூலமாக பிரகாசிக்கப் பட்டிருக்கிறது.

நமோ நமோ யாமுநாய
யாமுநாய நமோ நம
நமோ நமோ யாமுநாய
யாமுநாய நமோ நம

திருவேங்கடமுடையான் திருவடி சரணம்.



(தொடர் கட்டுரை)

மூலம் : 105

"ஆய என்கிற இத்தால் - சென்றால் குடையாம்" என்கிற படியே எல்லா அடிமைகளும் செய்யவேணும் என்று அபேக்ஷிக்கிறது"

1) ஆய என்னும் வேற்றுமையானது தெரிவிக்கும் செய்தி யாது?

"நாராயணாய" என்பதில உள்ள 'ஆய' என்னும் வேற்றுமையானது, சேதனன், ஈசுவரனுக்கு எல்லாத் தொண்டுகளையும் புரிய வேண்டும் என்பதைத் தெரிவிக்கின்றது.

"சென்றால் குடையாம்
இருந்தால்சிங் காதனமாம்
நின்றால் மரவடியாம்
நீள்கடலுள்-என்றும்
புணையாம் மணிவிளக்காம்
பூம்பட்டாம் புல்கும்
அணையாம் திருமாற் கரவு"
53, முதல் திருவந்தாதி

அனந்தாழ்வான்(ஆதிசேஷன்) எம்பெருமானுக்குப் பல வகையாலும் கைங்கர்யம் செய்து வருதலை இப்பாசுரம் விளக்குகிறது.

"எம்பெருமான் உலாவுங்கால் குடையாகவும், எழுந்தருளியிருக்குங்கால் அரியணையாகவும், நின்று கொண்டிருக்குங்கால் பாதுகையாகவும், பரந்த கடலில் திருப்பள்ளி கொள்ளுதற்குரிய மெத்தையாகவும், ஒளி மிக்க மங்கள விளக்காகவும், அழகான உடையாகவும் (திருப் பரி வட்டம்) தழுவி மகிழ்தற்குரிய அணையாகவும் ஆதிசேஷன் என்னும் அரவு பலவகையாலும் திருமாலுக்குப் பணிவிடை செய்கிறது என்று பொய்கையாழ்வார் தம் பாசுரத்தில் விளக்கியுள்ளமை அறிந்து இன்புறுவதற்குரியதாகும்.

# முமுட்சுப்படி

திரு. மாருதி தாஸன் - காஞ்சிபுரம்.

மூலம் : 106

" 'நமஸ்ஸாலே' தன்னோடு உறவில்லை என்று வைத்து கைங்கர்யத்தைப் ப்ரார்த்திக்கக் கூடுமோ? என்னில்,"

மூலம் : 107

" 'படியாய்க் கிடந்து உன் பவளவாய் காண்பேனே!' என்கிறபடியே கைங்கர்ய ப்ரார்த்தனை வந்தேறியன்று; ஸ்வரூப ப்ரயுக்தம்"

1) நம என்னும் பதத்தால் சேதனன் அத்தியந்த பரத்தின் (ஆண்டவனுக்கே தொண்டு புரிய உள்ளான்) என்பது சொல்லப்பட்டது. அப்படியிருக்கப் பகவானுக்குக் கைங்கர்யம் செய்ய வேண்டும் என்பது சுதந்திரத்தின் பாற்படாதா?

நம என்னும் பதத்தாலே சேதனன் தனக்கென்று ஒன்றையும் விரும்பிச் செய்வதற்குச் சுதந்திரமற்ற அத்தியந்த பாரதந்திரன் என்பதை அறிந்தோம்.

ஆனால், இந்த ஆய என்னும் பதம் சேதனன் பகவானுக்கு எல்லாக் கைங்கர்யங்களையும் செய்வதற்கு வேட்கை கொள்ள வேண்டும் என்பதை உணர்த்துகிறது என்பது எவ்வாறு பொருந்தும் என்பதைப் பார்ப்போம்.

"படியாய்க் கிடந்து உன் பவளவாய் காண்பேனே!" என்பது குலசேகரன் திருவாக்கு.

அத்தியந்த பாரதந்திரியமுள்ள சீவன் பகவானுக்குக் கைங்கர்யம் செய்ய வேண்டும் என்னும் வேட்கை அகங்காரத்தின் அடிப்படையில் இடையில் தோன்றியதன்று.

தலைவனான பகவானுக்குத் தான் அடிமை செய்வது தன்



னுடைய இயல்பு என்னும் எண்ணத்தில் தோன்றியதாம். எனவே இது சுதந்திரத்தின் பாற்பட்டது என்பது தெளிவு.

2) கைங்கர்யம் எத்தனை வகைப்படும்? அவையாவை?

கைங்கர்யம் மூன்று வகைப் படும். அவையாவன.

(i) தனக்கு மட்டும் இன்பம் கிடைக்கவேண்டும் என்னும் அகங்காரத்தோடு பகவானுக் குச் செய்யும் கைங்கர்யம்.

(ii) தனக்கும் பகவானுக் கும் இன்பம் கிடைக்க வேண் டும் என்னும் பொதுநோக்குடன் செய்யும் கைங்கர்யம்.

(iii) தான் செய்யும் கைங்கர் யம் ஈசுவரனுக்கு மட்டுமே இன் பம் அளிக்க வேண்டும் என்கிற அத்தியந்த பாரதந்திரிய எண் ணத்தோடு செய்கின்ற கைங்கர் யம்.

3) இம் மூன்று கைங்கர்யத்துள் எது தக்கது? ஏன்?

பகவானுக்கு மட்டுமே செய் யப்படும் கைங்கர்யமே சிறந் தது. சேதனன் பகவானுக்கு அடிமையாய் இருந்து பகவா னுக்கு இன்பமூட்டும் கைங்கர் யங்களையே செய்து, கைங்கர் யத்துக்குத் தடை வருங்கால் தரிக்க முடியாத நிலை அடை தலே ஆன்ம சொரூபமாம் எனவே இதுவே தக்கதாம்.

## மூலம் : 108

"ஆகையால், 'வழுவிலா வடிமை செய்ய வேண்டும் நாம்' என்கிற ப்ரார்த்தனை யைக் காட்டுகிறது"

1) ஆய என்னும் வேற்றுமை எதனைக் காட்டுகிறது?

கைங்கர்யம் செய்வதிலிருந்து நீங்காதவாறு எல்லாவற்றையும் செய்ய வேண்டும் என் கிற விருப்பத்தை இவ்வேற் றுமை தெரிவிக்கிறது.

கைங்கர்யம் செய்வதில் விருப் பம் கொள்ளுதல் என்பது இடை யில் வந்ததன்று. அது ஆன்மாவுக்கு இயல்பாகவே அமைந்த செயலாகும்.

இதனைத்தான், "வழுவிலா அடிமை செய்ய வேண்டும்" என் கிறார் ஆழ்வார்.

2) 'வழுவிலா அடிமை செய்யவேண்டும்' என்பதனை விளக்குக.

"ஒழிவில் காலமெல்லாம்
உடனாய் மன்னி
வழுவிலா அடிமை செய்ய
வேண்டும்நாம்
தெழிகு ரல்அரு வித்திரு
வேங்கடத்து
எழில்கொள் சோதிஎந் தைதந்தை
தந்தைக்கே!"

என்பது நம்மாழ்வார் திருவாய் மொழி.

எக்காலத்தும் பகவானுட னேயே இருந்து கொண்டு நீங் காது, குற்றமில்லாத கைங்கர் யங்களை நாம் திருவேங்கடமு டையானுக்குச் செய்ய வேண் டும் என்று நம்மாழ்வார் கூறு கிறார்.

இப்பாசுரம் ஆண்டவனுக்கு அடிமை செய்தல் என்பது ஆன் மாவின் சொரூபம் என்பதை வலியுறுத்திக் கூறுகிறது.

பகவானுக்கு உவப்பினை ஊட்டக்கூடிய கைங்கர்யங் கள் எல்லாவற்றையும் செய்ய வேண்டும் என்பதனை 'ஆய' என்னும் வேற்றுமை விளக்குவ தனை இப்பாசுரம் உறுதிப் படுத்துகிறது.

## மூலம் : 109

" 'கண்ணாரக் கண்டு காத லுற்றார்க்கு முண்டோ கண் கள் துஞ்சுதல்?' என்கிற படியே காண்பதற்கு முன்பு உறக்கமில்லை; கண்டால் 'ஸதா பச்யந்தி' ஆகையால் உறக்க மில்லை."

1) பகவத் கைங்கர்யத்தை விரும்பிப் பெறும் பிரார்த்தனையை இடை-விடாமல் செய்வதற்குத் தகுந்த வேட்கையுடையார் இயல்புயாது?

பகவத் கைங்கர்யத்தை விரும் பிப்பெறும் பிரார்த்தனையை இடைவிடாமல் செய்வதற் குத் தகுந்த வேட்கையுடையார் எம்பெருமானைச் சேவிப்பதற்கு முன்பு உறக்கமில்லாமல் இருப் பர். இதனைத்தான் நம்மாழ் வார்,

"எழுவதும் மீண்டே படுவதும்
பட்டுஎனை ஊழிகள்போய்க்
கழிவதும் கண்டுகண்டு எள்கவல்
லால்இமை யோர்கள் குழாம்
தொழுவதும் சூழ்வதும்

செய்தொல்லை
மாலைக்கண் ணாரக் கண்டு
கழிவதோர் காதலுற் றார்க்கும்
உண்டோ கண்கள் துஞ்சுதலே!"

என்று பாடுகிறார்.

பகவானைக் கண்ட போதும் மகான்களுக்கு உறக்கம் வராது. திருமாலின் திவ்விய மங்கள விக்கிரகத்தை நித்திய சூரி கள் எப்போதும் கண்டுகொண் டிருப்பதனால் உறங்காததைப் போலவே, திருமாலைக்கண்ட பிறகும் மகான்களுக்கு உறக்கம் வராது.

"தத் விஷ்ணோ: பரமம் பதம்
ஸதா பச்யந்தி ஸூரய:"

என்று உபநிஷதமும் கூறுகிறது.

அதாவது, நாள்தோறும் பக வானை இமைக்காமல் பார்த் துக் கொண்டு இன்பத்தை அனுபவிப்பதனாலே கண்ட பின்பும் உறக்கம் இல்லை என்பதனையே இந்த அடிகள் உணர்த்துகின்றன.

இவ்வாறு, பகவானைக் காணும் முன்பு காண வேண்டும் என்கிற விருப்பத்தால் உறக்க மின்மையும் காணும் போது இன்பத்தை அனுபவித்தலால் உறக்கமின்மையும் மகான் களுக்கு இயல்பு என்று ஆசி ரியர் கூறுகிறார்.

மூலம் : 110

" 'பழுதே பல பகலும் போயின' என்று இழந்த நாளைக்குக் கூப்பிடுகிறவனுக்கு உறங்க விரகில்லை."

1) பகவானைக் காணாது கழிந்த நாள்களை எண்ணி வருந்துபவன் இயல்பினைக் கூறுக.

பகவானைக் கண்டதனால் ஏற்படும் இன்பத்தினை அனு பவிப்பவன் "அடையத்தக்க பொருளாக இருக்கும் பக வானைக் கண்டு இன்பம் அனுபவிக்காமல் வீணாகவே இதற்கு முன்புள்ளகாலமெல் லாம் கழிந்து விட்டனவே" என்று தான் முன்பு இழந்த நாள்களை எண்ணி வருந் திக் குக்கூரலிடுபவன் உறக்கங் கொள்ள மாட்டான் என்று கூறு கிறார்.

2) "பழுதே பல பகலும் போயின" எனும் பாசுரத்தை எடுத்துக்காட் டுக.

"பழுதே பலபகலும் போயின-
வென்றஞ்சி
அழுதேன் அரவணைமேற்
கண்டு - தொழுதேன்
கடலோதம் காலலைப்பக்
கண்வளரும் செங்கண்
அடலோத வண்ணர் அடி.
என்பது முதல் திருவந்தாதி.

"சிவந்த கண்களை உடை யவனாயும், தன் அடியார் களின் பகையை அழிப்பவ னாகவும், கடல் அலையா னது தன் திருவடிகளின் மீது படுமாறு ஆதிசேடன் மேல் பள்ளி கொண்டிருக்கும் எம்பெ ருமானின் திருவடிகளை இன்று கண்டு சேவித்தேன். இவ்வாறு சேவித்து இன்புறுதற்குரிய வாழ்நாளில் பல வீழ்நாள்களா கக் கழிந்தனவே." என்பது இப் பாசுரக் கருத்தாகும்.

மூலம் : 111

" 'அன்று நான் பிறந்தி லேன், பிறந்தபின் மறந்திலேன்' என்னா நின்றார்களிறே?"

1) பகவத் இன்பத்தினை அறிந்தவர்-கள் அதனை மறத்தல் முடியாது என்பதனை ஆசிரியர் எவ்வாறு விளக்குகிறார்?

"அன்று நான் பிறந்திலேன், பிறந்தபின் மறந்திலேன்" என் பார் திருமழிசையாழ்வார்.

"அவனை யறிவதற்கு முன்பு யான் ஞானப்பிறவி பெற்றே னில்லை. இந்த ஞானப்பி றவி உண்டானபின்பு அவனை ஒரு போதும் மறந்தேனில்லை", என்று ஆழ்வார் அருளியுள் ளதனை எடுத்துக்காட்டிப் பக வத் இன்பத்தை அறிந்த பின்பு அதனை மறத்தல் முடியாது என்பதனை விளக்குகிறார்.

மூலம் : 112

"இவ்வடிமைதான் 'ஒழி வில் காலமெல்லாம் உடனாய் மன்னி' என்கிறபடியே, ஸர்வ தேச ஸர்வகால ஸர்வாவஸ் தைகளிலும் அநுவர்த்திக்கும்."

1) கைங்கர்யம் செய்யும் அடிமை நிலையை ஆசிரியர் எவ்வாறு விளக்குகிறார்?

பகவானுக்குச் செய்யும் தொண்டானது காலதேச வர்த் தமானங்களைக் கடந்து நிற்கும் என்று ஆசிரியர் அருளிச்செய் கிறார்.

"ஒழிவில் காலமெல்லாம் உட னாய் மன்னி வழுவிலா அடிமை செய்ய வேண்டும் நாம்" என்று நம்மாழ்வார் அரு ளிச்செய்ததைப்போலே, எல்லாக் காலங்களிலும் எல்லாத் தேசங் களிலும் எல்லா நிலைகளிலும் பகவானைப் பிரியாது நின்று தொடர்ந்து செய்யப்படும் இக் கைங்கர்யம் என்று அடிமை நிலையை ஆசிரியர் அழகுற விளக்குகிறார்.

நாராயண என்பதன் பொருள்
முற்றும்.

மூலம் : 113

"எட்டிழையாய் மூன்று சர டாய் இருப்பதொரு மங்கள ஸூத்ரம் போலே திருமந்த்ரம்."

1) திருமந்திரத்தை ஆசிரியர் எதற்கு உவமையாகக் கூறுகிறார்?

திருமந்திரத்தை ஆசிரியர் மங் கல நாணுக்கு உவமையாகக் கூறுகிறார்.

திருமந்திரம் மங்கல நாணைப் போன்றது. மங்கல நாணனது சரடு ஒன்றுக்கு எட்டு இழை களாகவும், மூன்று சரடுகளாக வும் கொண்டு விளங்கும்.

அதுபோல, திருமந்திரமா னது எட்டு எழுத்துக்களாக வும் மூன்று பதங்களாகவும்

கொண்டு ஒப்பற்ற அழகுடன் விளங்குகின்றது.

ஆனால் உலகில் காணப்படும் மங்கல நாணுக்கும் பதினாறு இழைகளும், இரண்டு சரடுகளும் இருக்கும்.

இவள் தன் கணவனுக்கு மட்டுமே உரிமையுடையவள் என்பதை உணர்த்துவதே திருமாங்கல்யம். அதுபோல, திருமந்திரமும் சேதனன் பகவானுக்கு மட்டுமே உரிமையுடையவன் என்னும் பொருள் ஒளிர நிற்கிறது.

மூலம் : 114

"இத்தால்-ஈஸ்வரன் ஆத்மாக்களுக்குப் பதியாய் நின்று ரக்ஷிக்கும் என்கிறது."

1) மங்கல நாணைத் திருமந்திரத்தை உருவகப்படுத்தியதால் வெளிப்படும் பொருள் யாது?

மங்கல நாணைத் திருமந்திரத்தை உருவகப்படுத்தியதால், திருமந்திரத்தோடு சம்பந்தமுடைய சேதநர்களுக்கு (ஆன்மாக்களுக்கு)ப் பதியாக இருந்து கொண்டு பகவான் காப்பாற்றி வருவான் என்பது தெளிவான பொருளாம்.

மூலம் : 115

"ஆக, திருமந்த்ரத்தால், எம்பெருமானுக்கே உரியேனான நான், எனக்குரியனன்றிக்கே ஒழிய வேணும். ஸர்வ சேஷியான நாராயணனுக்கே எல்லா வடிமைகளும் செய்யப்பெறுவேனாக வேணுமென்றதாயிற்று."

1) திருமந்திரத்தில் சொல்லப்பட்டுள்ள கருத்தைச் சுருக்கி வரைக.

நான் எம்பெருமானுக்கு அடிமைப்பட்டவன். அப்படிப்பட்ட நான் எனக்கே உரியவன் என்று இருத்தல் கூடாது. எல்லாப் பொருள்களுக்கும் தலைவனாக இருக்கக்கூடியவன் நாராயணனே! அந்த நாராயணனுக்கே நான் எல்லாக் கைங்கர்யங்களையும் செய்தல் வேண்டும்" என்பதே இத்திருமந்திரத்தின் சாரமான பொருளாம்.

பிள்ளை லோகாசார்யர் திருவடிகளே சரணம்.

95 முதல் 115 வரையுள்ள சூத்திரங்களின் பொருள்களைத் தொகுத்து வரைக.

நாராயணாய என்பதில் உள்ள 'நார' பதம் அழிவில்லாத நித்தியமான பொருள்களின் திரள்களைத் தெரிவிக்கிறது.

'அயநம்' என்னும் பதம் பகவான் நித்திய வஸ்துவின் திரள்களுக்கு ஆதாரப் பொருள்களாக இருப்பவன் என்பதையும், அவற்றை ஆதாரமாகக் கொண்டுள்ளவன் என்பதையும் தெரிவிக்கிறது.

இவ்விரண்டு வகையான பொருள்களால் பகவானின் பரத்துவ ஸௌலப்பியங்களும், அந்தர்யாமித்துவ, உபாயத்துவம், உபேயத்வங்களும் பெறப்படுகின்றன.

நாராயணன் சேதநனுக்கு எல்லா உறவுமாக இருக்கிறான். நாம் அவனோடு தொடர்பின்றிப் பிறருடன் சேர்ந்து இருக்குங்காலத்தும் அவன் முகந்தோற்றாது நின்று நம்மை இரட்சிக்கிறான்.

'ஆய' என்னும் வேற்றுமை, சேதனன் ஈசுவரனுக்குச் செய்யும் எல்லாத் தொண்டுகளையும் விரும்பிப் பெற வேண்டும் என்பதைத் தெரிவிக்கிறது. இங்ஙனம் விரும்பலாமோ? என்னும் வினாவுக்கு அத்தியந்த பாரதந்திரியத்தினால் இது கூடும். இத்தகைய கைங்கர்யமே ஆன்மாவின் சொரூபம் என்பதையும் தெரிவிக்கிறது.

சேதனனுக்கு இக்கைங்கர்ய ப்ரார்த்தனை இன்றியமையாதது. இதில் வேட்கையுடையவர் ஈசுவரனைக் காண்பதற்கு முன்பும், கண்டபின்பும் உறக்கங்கொள்ளார்.

ஈசுவரனைப் பற்றிய உண்மை ஞானத்தைப் பெற்றவரால் அவனை ஒரிமைப் போதும் மறத்தற்கு இயலாது. பகவத் கைங்கர்யத்தை இழந்த நாள்களுக்காக அவர்கள் கவலைப்படுவர். பகவத் கைங்கர்யம் செய்வதற்குக் காலதேச வர்த்தமானம் என்னும் வரையறை இல்லை. இத்திருமந்திரம் மங்கலநாணுக்கு ஒப்பானது. எனவே, பகவான் சேதனர்களுக்குத் தலைவன் என்பது இவ்வுவமையால் விளக்கமாகிறது.

இச்செய்திகளே 95 முதல் 115 வரையுள்ள சூத்திரங்களின் (மூலங்களின்) பொருள்களாக அறியக்கிடக்கின்றன.

(திருமந்திரத்தின் பொருள் முற்றுப் பெற்றது.)

(தொடரும்)



# "பொய்" "மெய்"யானதேன்?

நல்லாசிரியர் வெ. சுந்தரமய்யர் - பரமக்குடி

உயிர் அழியாதது. உடல் அழியக்கூடியது. இதை யாவரும் உணர்ந்திருந்தபோதும் உடலைப் பேணுகின்ற முறையில் உயர்வாகக் கருதி சிறப்புற வைத்திருக்க விரும்புவது இயற்கை.

உடல் நிரந்தரமற்றது. மண்ணுககுள் மறைவதுதான் மனித சரீரம். அழுக்கும் நோய்களும் அதனிடம் எந்த வகையிலாவது நிரந்தரமாக உடல் அழியுமட்டும் உடன் இருப்பது கண்கூடானதாகும். அதனால் ஊத்தைச் சரீரம் என்றனர் சித்தர்கள்.

இப்படிப்பட்ட உடல் "மெய்" என்று அழைக்கப்படுகிறது. மாறுபாடுகளும், தேயுறுதலும், வேற்றி அனுபவிப்பது உடலா? அல்லது உயிரா? சிந்தனைச சிறகுகள் விரிகின்றன. சீராகப் பறக்கினறன.

காட்சிகள் யாவையும் கணகள் பார்த்துக களிககின்றன. நாசிகள் நறுமணங்களை விரும்பி நுகர்கின்றன. செவிகள் எல்லா வித ஒலிகளையும் ஏற்று உணர்விக்கின்றன. வாய் சுவையுணர்ந்தும், சொல் பிறப்பிததும், இசை பாடியும் இனிமையடைகிறது.

இவை தவிர்த்த பிற உறுப்புக்கள் உணர்வுகளை உள்ளடக்கியும், வெளிப்படுத்தியும் தன் செயல்களைத் தங்குத் தடையின்றிச் செய்கின்றன. ஒவ்வொரு உறுப்புக்களும் ஒவ்வொரு பணியைச் செய்கின்றன.



திறன் குன்றுவதுமான உடலை "மெய்" எனப்போற்றுவது ஏன்?

எந்த ஒரு மனிதனுக்கும் இரண்டு ஆசைகள் எப்போதும் தப்பாது உண்டு. ஒன்று துன்பம் வராதிருகக வேணடும். மற்றொன்று இனபம் நிறைந்திருகக வேண்டும்.

இவ்வாசை எதன்மீது? உடலின் மீதா? உயிர் மீதா? உயிர் என்னும் காற்று எந்த இன்பத்தை விழைகின்றது? உடல் இருந்தால் தானே இன்பம் துய்க்க முடியும. உயிரற்ற உடல் இனபத்தினை துய்க்க முடியுமா? அல்லது உணரத்தான் முடியுமா?

முக்யத்வம் உடலுக்கா? உயிருக்கா? ஆசைகளை நிறை

இச்செயல்களில் இன்பம் மட்டுமே அமைகின்றனவா? துன்பமும தானிணைந்து உள்ளனவே!

இவ்வாறிருக்கும் போது உடலை "மெய்" என்று கூறுவதின் பொருள் யாது? "மெய்" என்றால் உண்மை, நிலைத்து, அழியாதது என்பது தானே பொருளாகும்.

அழியாத ஒன்றுக்கு "மெய்" எனக்கூறுவதில் நியாயம் உள்ளது. அழியக்கூடிய, நிரந்தர மறற, மாறுபாடுகள் கொண்ட வளர்சிதை மாற்றங்கள் நிரம்பிய குறைகள் மிகுந்த உடல் "மெய்" எனப்படுவது எங்ஙனம் பொருந்தும்?

"காயமே இது பொய்யடா, காற்றடைத்தப் பையடா", என்ற வரிகள் உடலைப் பொய் என்றுதானே கூறுகிறது? தவிர எந்த ஒரு மனிதனுககும் அவனது அங்ககங்கள் ஒரே அளவில் அமைவதில்லை. இஃது அறிவியல் உண்மை. கண்கள் அமைப்பு, கால்கள், கைகள், விரல்கள் போன்றவை துல்லியமாகக் கணக்கிட்டால் சற்றே மாறுபாடு இருப்பது நன்கு புலனாகும்.

இப்படிப் பற்பல வகைகளிலும் இவ்வுடல் உண்மைக்குப் புறம்பானதென்று நிரூபிக்க முடியும். ஆனால் "மெய்" என்று அழைப்பதன் நோக்கம் யாது?

உடலுள காறறு (உயிரக காறறு) இயஙகிககொணடிருககிறது. அககாறறு இயஙகும வரையில் உடலாலான செயல பாடுகள நடைபெறுகினறன.

வெளிககாறறை உணரவா வது முடிகின்றது. ஆனால உயிர்க்காறறை உணரவும் முடி வதில்லையே! தன்னுள இருநது தனனை இயககும அநத உயிரக காற்றை உடல உணரநதுள ளதா?

உணர்ந்தால் இவ்வுடல் "மெய்" என அழைக்கப்ப டும். உண்மையுணர விக்க உறுதுணையாக அமைந்த உடல் "மெய்" என றழைக்கப்படும். ஞானிகளும் இந்த நிலை உணர்ந்தே "மெய்" என்றூர்கள் போலும்.

"எப்பொருள் எத்தன்மைத்தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு"
என்றூர் வள்ளுவர்.

உண்மையுணராது பொய் வாழ்க்கை நடத்துவதால் ஏற் படுவதே துன்பம். மெயமையு ணர்ந்து நடத்தும் வாழ்க்கை இன்பத்தை எளிதாக்கி நிற்கும்.

உடலினுள் வெப்பம், குளிர், காற்று, நீர் போன்றவை சீராக அமைந்து இயங்கும் வரை துன்பமில்லை. ஏதேனும் கூடவோ, குறையவோ நேர்ந் தால் இன்பம் மாறி துன்பம் தோன்றுகின்றது.

இறையுருவைக் கண்களால் கண்டு ஆனந்திக்கவும், இறை நாமங்களை வாயால் புகழ்ந்து போற்றலும், இறையின் அற்பு தங்களைப் பிறர் கூறக்கேட்ட லும், இறைவன் பிரசாதங்க ளின் தன்மைகளை நுகர்தலும், இறைத்தொண்டுககும், இறை யடியாரகளின சேவைககும் உடலை ஆட்படுத்திக கொள்வ தாலும கிட்டும் இன்பம் பேரின் பம். இப்பேரின்பம துன்பம் தவிரகக வலலது. இச்செயல் பாடுடைய உடலே "மெய்" எனப் பட்டதாம.

எப்போதும் இறைவழிபாடா? இக்காலத்தில முடியுமா? இல் லறப்பணிகள், அலுவலகப்பணி கள், தொழில்கள், உற்றூர் உற வினர், மக்கள் என்று பல் வேறு பிரச்சினைகள் வந்து சூழ்ந்துள்ள போது, எண் ணற்ற கவலைகளால் என்றும் பீடித்து மீள வகையறியாது இருக்கும் போது எப்போதும் இறைத்தொண்டு என்பது முடி யுமா? "மெய்' ' என்ற சொல்லை இவ்வுடலுக்கு நிலை நாட்டு என்றூல் நடக்கும் காரி யமா? எப்படிமுடியும்? முடி யும். வீண்பகட்டு, ஆடம்பரம், பிறர் மெச்சப் புரியும் போலிச் செயல்கள் தவிர்க்க வேண் டும். 'செல்வோம்', 'செல்வோம்' என்ற பொருளில் அமைந்த "செல்வம்" சேகரிப்பது ஒன்றே உடல் எடுத்த பயன் என்று உடலை வருத்திச் செயல்படும் தீய செயல்பாடுகள நீங்கும்படி நடந்து கொண்டால் முடியும்.

உண்ணவும் உறங்கவுமே உடல் எடுத்தோம் என்ற எண் ணம் மாறி உடல் "மெய்" யை நாடவே உணவு கொண்டும், உழைப்பின் களைப்பு நீங்கவே உறக்கம் என்ற நிலை கொண்டு வாழந்தால் உறுதியாக முடியும்.

இதனாலன்றே "ஒருவேளை உண்பவன் யோகி, இருவேளை உண்பவன் போகி, திரிவேளை உண்பவன் ரோகி, அதறகு மேல் உணபவன் துரோகி" எனறு அறிஞர கூறினர.

சமயகுரவர, ஆழவார்கள, ஆசசாரியாரகள, மெயயடியார கள என அழைககப்பட்டதை யும ஆராய்ந்து தெளிந்தால உணமை புலனாகும். இறைத தொண்டும், மானிடர யாவ ரும் மெய்மையுணர்வு கொள்ள புனித யாத்திரை கொண்ட செயலும, போதனைகளும், நற பணிகளும் நாளும் நிலைத்து புகழ் பரபபிக் கொண்டிருக்கின் றதை அறியமுடிகின்றது.

சென்ற நாள் (கடந்த காலம்) மீண்டும வராது. ஆனால் சென்ற நாட்களில் செய்த சீரிய தொண்டு நன்மைபெறச் செய்து நிலைத்த புகழ் நாட்டும்.

ஜாதி, மத, இனப்பாகுபா டுகள் காணுது காலடியில் தொடங்கி இமயம் வரை இந தியா . முழுதும் கால்நடை யாகச்சென்று அத்வைத நெறி பரப்பி, மக்கள் நல்வழிப்பட நறறெண்டாறறிய ஆதிசங்கரர் "மெய்"மையை நிலை நாட்டிய வரன்ரூே?

உண்மையான உழைப்பு, உழைப்புக்கேற்ற ஊதியம், ஊதி யத்திற்கேற்ற வாழ்க்கை, மெய் யுணர்வில் அன்பு கலந்த மென்மை, மேன்மைமிகு இறை யுருவை இதயத்தில் தாங்கிய பக்திச்செயல்பாடு அமைந்தால் அவ்வுடல் "மெய்"தானே!

இதயத்துள் இனிதமர்ந்த ஈசன், அன்பால் செய்யும் தொண்டில் அகமகிழ்ந்து இன் பத்தை அளிக்கின்ரூன். "மெய்" குடியேறிய இடம் பொய் மறைந்த புண்ணிய இடமாக ஆகிவிடுகின்றது. அவ்வுடல் மெய்யுடலாகின்றது.

மெய்யுடல் கொண்டபோது, இறையுறையும் உடலாக அமையும் போது பரிபூரணத்துவமே பாங்குடன் மிளிரும். 100+1=100, 100-1=100 என்பதே மெய்மையின் விதி. பூரணத்தில் கூடவோ, குறையவோ அமையாது. சத், சித், ஆனந்தம் தானே அமையும்.

இதயத்தாமரையே அவன் விரும்புமிடம். அன்புத் தேனே அவன் அருந்துவது. சுகந்த மணமே நிறைப்பது. தெய்வ நம்பிக்கை, தெய்வ வழிபாடு, தெய்வத்தொண்டு செய்யும் உடலில் தெய்வ சக்தி இருக்க அவ்வுடல் "மெய்" என்றழைப்பதில் தவறேது?

விழித்தெழும்போது, கடமைகளாற்றும் போதும், திருநீறு அணியும்போது, உண்ணும் போது, உறங்கும்போது பேசும் போதும், பாடும் போதும், மகிழும் போதும், ஈசனை எண்ணியும், புகழ்ந்தும், வணங்கியும் "மெய்யுணர்வு" மேனியில் நிலைக்கச் செய்யலாமே!

"எழும்போதும் இறைவன் நாமம்
எழுந்து நடக்கும் போதும்
சொல்வேன்
விழும்போதும் இறைவன் நாமம்
தொழுதே பணிந்திடச் செய்வேன்
உச்சரிப்பில் இறைவன் நாமம்
எச்செயல் செயினும் சொல்வேன்
மெச்சும் புகழ் இறைவன் நாமம்
நிச்சயம் நினைந்தே செய்வேன்
உண்ணும்போதும் இறைவன் நாமம்
வண்ணமுறச் சொல்லி யுண்பேன்
தண்ணருள் நிறைக்கும் வல்லோன்
என்னெஞ்சில் என்றும் உள்ளான்."

இவ்வாறு எச்சிறு செயல் செய்யமுற்படும்போதும் ஈசனை எண்ணி, போற்றித்துதித்து மாசிலாமணியை மனத்தகத்தே சிக்கெனப் பிடித்து வைத்துக் கொண்டால், மெய்ப்பொருளை ஏற்ற உள்ளத்தைத் தாங்கும் உடலும் மெய்யாகிவிடுதல் வியப்பற்றதுதானே!

உடல் எடுத்த பயன், மடமை நீங்கிட, மாந்தருக்கு உதவிட, மகேசனுக்குத் தொண்டு புரிந்திடத்தானே! மெய்ப்பொருள் உணர்ந்து பேதினியில் தொண்டாற்ற அழியும் உடலும் மெய்யுடலாகின்றது.

முச்சக்தியும் முழுமை பெற்று மாந்தரிடம் திகழுகின்றதாலும் "மெய்" எனப் போற்றலாம்.

பிரமன் படைக்கும் கடவுள் - சரஸ்வதியாம் கலைமகள் அறிவுக்கடவுள்.

திருமால் காக்கும் கடவுள் - திருமகள் செல்வத்திற்குக் கடவுள்.

சிவன் அழிக்கும் (தீயன அழிக்கும்) கடவுள் - மலைமகள் சக்திக் கடவுள் (சிவம் என்றால் மங்களம் என்பதாகும்.)

அறிவின் துணை கொண்டு ஆக்குதல் (செயல்படுதல்) வேண்டும். பொருளின் துணை கொண்டு வாழ்க்கையைச் செம்மையுறச் செய்தல் வேண்டும். சக்தியின் துணை கொண்டு தீயன அழித்துப் புதுமை படைக்க வேண்டும்.

எனவே முச்சக்திகளும் உடலின் கூறுகளால், எண்ண எழுச்சிகளால் ஏற்றமடைகின்றன. அந்த சக்தி தெய்வங்கள் குடியிருக்கும் உடல் "மெய்" என்பதுதானே உண்மை.

முத்தொழில் தெய்வங்கள் மனிதனிடம் பூரணமாக நிலை பெற்ற போது உண்மையும் நன்மையும் நிலவும். துன்பமே நீங்கிப் போதுமான புகழையும் சேர்க்கும்.

மெய்ப்பொருள் உணர்ந்து செயல்பட்டால் "பொய்" "மெய்" யாகும். ★

## பேச்சு

அதிகம் பேசாதீர்கள். அதிகம் பேசும் போது, நேரம் வீணுவது மட்டுமல்ல. உங்கள் சக்தியும் விரயமாகிறது. அதே சமயம் உங்கள் மீது பிறர் வைத்துள்ள மதிப்பும் குறைந்து போகிறது. ரொம்ப அவசியமான போது மட்டுமே பேசுகிறவனுடைய ஞாபக சக்தி அதிகரிக்கிறது. ஆன்ம சக்தியை உணரவும் மௌனம் உதவுகிறது.

-இளைஞர்களுக்கு 'பாபா'.

## தியாகம் செய்தல்

நாம் மனத்துணிவைத் தேடிப்பெற வேண்டும். அதன் பிறகு, பெறவேண்டியது போதும் என்ற மனம். அப்புறம் வேண்டியது 'தன்னைத்' தியாகம் செய்தல். இறுதியாக வேண்டியது தன்னையே அறியும் பக்குவ நிலை.

-சத்ய சாயிபாபா.

# வைணவ வழக்குச் சொற்களும் பொருள்களும்

டாக்டர் திரு. எம். வரதராஜன் - திருப்பதி

திருமகள் கேள்வனாம் எம்பெருமானால் ஆட்கொள்ளப் பட்ட மெய்யடியார்கள் தமது அனுபவத்தை நம் போல்வாரும் அநுபவித்து உய்வுபெற அருளிய நூல்கள் பல பல. அவற்றுள் மெய்யடியார்களான ஆழ்வார்கள் எம்பெருமானது இயல்பு, வடிவம், குணங்கள், திருவிளையாடல்கள் ஆகியவற்றில் ஈடு பட்டு பக்தி பரவசராய்ப் பாடிய அருளிச்செயல்கள் என்னும் நாலாயிர திவ்யப்ரபந்தம் தனிச்சிறப்பு வாய்ந்தது. அவற் றின் ஆழ்பொருளை உள்ளபடி அறிந்துகொள்ள, சுவையே வடிவெடுத்த பல வியாக்கியானங்களை ஆசார்யர்கள் அருளி யுள்ளனர். அவ்வியாக்யானங்களில் வழங்கிய சொற்களையும், அவர்கள் வாழ்ந்த காலத்தில் வழக்கிலிருந்து தற்போது வழக்கில் இல்லாது பொருள் நிறைந்த பல அருமையான தமிழ்ச்சொற்களையும் மிகவும் நுட்பமாக நோக்கி திவ்ய பிரபந்த அகராதி என்றும் நாலாயிர திவ்யபிரபந்த அக ராதி என்றும் இரு நூல்கள் முறையே 1961லும், 1963லும் வெளிவந்துள்ளன. (1. திவ்ய ப்ரபந்த அகராதி, Edited by Vidwan Sri T. ராமகிருஷ்ண அய்யங்கார், Govt. Oriental Manscript Library, Madras, 1961 2. நாலாயிர திவ்யப்ரபந்த அகராதி, தொகுத்தளித்தவர் ஸ்ரீ ஸ்தாநீகம் C. பார்த்தசாரதி அய்யங்கார் ஸ்வாமி, ஸ்ரீரங்கம் தேவஸ்தானம், ஸ்ரீரங்கம், 1963.)

அவற்றைப் பின்பற்றி, இன்று வைணவ வழக்குச்சொற் களை அறிய விரும்புவோர்க்கு வைணவ உரைகளைப் பயன்படுத்துவோருக்கும் ஏற்ப ஆங்காங்கே சிற்சில சொற் களை அகரவரிசைப்படுத்தித் தொகுத்து வழங்கப்படுகிறது.

**அக்காரக்கனி** — பழமில்லாத மரம், புதிதாய்ப் பழுத்த, சுவை மிகுந்த பழம். ஸஹகாரம் என்ற வடமொழியின் திரிபாய் அக் காரம் என்பது ஒட்டுமாங்கனி என் பர் சிலர். அக்காரம் ஸஹகாரத்தின் திரிபல்ல. அக்காரம் - சர்க்கரை அல் லாது வெல்லம். அக்காரம், சுகாரம், காரம். அதனைத் தந்து இனிப்பு. பழ மில்லாத மாம் புதிதாய்ப் பழுத்தாற் போல சுவைமிக்க பெருமான். பழ மில்லாத மாமரமது கருப்பு. அதற்கு உடலிலேயே சுவை உண்டு. அதைவிட மேலானதொரு சுவை பழத்தில் இருக்க முடியாததாகையால், அது பழமில்லாத மாமாயிற்று. பழமில லாத கருப்புச்செடி பழுத்தால் அதன் பழம் மிக மிக இனிப்பாகும். அது போல இனிமைமிக்க பெருமான் என்பர்.

**அங்கமணி** — சீர்வரிசை. ஆனை மேல் அங்கமணி கொண்டு வந்தாளோ என்று மரும களை மாமியார் ஏசுவது உண்டு.

**அக்கார வடிசில்** — அக்காரம்-சர்க்கரை அடிசில்-சோறு, சர்க்கரைப் பொங்கல் என்று சொற் பொருள். ஆனால் பொங்கலல்லாத வேறு வகைக்கு இது பெயராகி றது. அரிசியும் பச்சைப்பருப்பும் சம மாக நாலு பங்கு பாலில்சமைத்து சர்க்கரையும் நெய்யும் அதிகமாகக் கலந்து செய்வதுதான் அக்கார வடி சில். பால்சோறு என்பது பாயஸந் நம். சர்க்கரைப் பொங்கல் என்பது சர்க்கரந்நம். பாயஸந்நம் என்ற வட சொல்லில் வெல்லம் இல்ல. அக்கார வடிசில் என்ற தமிழ்ச்சொல்லில் பால இல்லை. பாயஸந்நம என்னும் பால் சோறென தமிழ்ச்சொல்லில்கூட வெல் லம் இல்லையாயினும் அது அக்கார வடிசிலுக்கே பெயராகிறது என்பர்.

**அகஞ்சுரிப்படுத்தல்** — குறைத்தல்.

**அக்ப்பைக் குறி** — அகப்பை அளவு. ஒரு பொருளை கடன் வாங்குபவர்கள் 'கைக்குறி

யாகத் தாருங்கள் ஆப்பைக்குறியாகத் தாருங்கள்' என்று சொல்லுவார்கள். அசலகத்தில் உப்பு முதலியவைகளை கையளவு கரண்டியளவாகக் கடன் வாங்குவது பற்றி அகப்பை என்பது ஆப்பை ஆயிற்று.

அகம்படியர் - அடியார்கள், அபிமானிகள்

அகமர்த்தம் - ஆத்மா.

அகவலைப்படுத்தல் - வலையில் அகப்படுத்தல்.

அகழ்ந்து போடுகை - பறித்துப் போடுகை

அங்காந்து - வாயைத் திறந்து

அங்கோல தைலம் - அழிஞ்சில் தைலம். அழிஞ்சில் பழம் அம்மரத்தின் கீழே உதிர்ந்து கிடந்தால், ஆகாயத்தில் மின்னினால், அப்போதே, அழிஞ்சுப் பழம் மரத்தில் பழையபடியே ஒட்டும். அப்போது அந்தப் பழத்தை வாங்கி தைலமாக்கி ஒரு மா விதையிலே தடவி, தரையிலே நட்டால், அப்போதே முளைத்து பெரிய மரமாய் காய்த்துப் பழுக்கும் என்பர்.

அச்சுத்தாலி - அச்சடித்தவற்றைக் கோத்துக் கழுத்தில் அணியும் ஆபரணம்.

அச்சோ - சிறு குழந்தையை முதுகில் அணைத்துக்கொள்ள விரும்புவார் சொல்லும் சொல்; இரக்கத்தையும் வியப்பையும் குறிக்கும்.

அசலகத்தார் - அசல் வீட்டார்.

அசலிடுகை - இறைவனை விட்டு கடைசி நிலையிலே போவது.

அஞ்சுகுடி - பகவத் விஷயத்துக்கு என்ன தீமை வருமோ என்று பயப்படும் குடி - ஆழ்வார்கள்.

அஞ்சுரு வாணி - தேரின் அச்சாணி

அட்டாலை - மேல்தளம்

அடிக்கழஞ்சு - விலையுயர்ந்தது. கழஞ்சு-கழற்கோடிக்காய். ஒரு அடி நிலம் ஒரு கழற்கோடித் தங்கமத்தனை விலையாகும் என்று பொருள். கழஞ்சி என்று கோவிலில் பூசைக்காக பசசைக் கற்பூரம் கலந்து வைக்கும் சந்தனத்திற்கும் பெயர்.

அடிக்குழல் - அடிமைப்பட்ட குடும்பம்.

அடிக்கோலுதல் - ஆரம்பித்தல்.

அடிமை - கைங்கர்யம்.

அடிமைக்குற்றேவல் - அடிமைத்தொழிலுக்கு உண்டான [illegible] குற்றேவல்- சிறுதொழில்; அந்தரங்கமான செயல்.

அடுசோறு - சமைக்கும் சோறு.

அடுகு வளம் - சாப்பாட்டுப் பெட்டி, அதாவது அடுக்குப் பெட்டி மேல் பெட்டியாய், வளம் - உணவுப் பொருளாய சாப்பாடு கொண்டு வரும் அடுக்கு.

அடைக்காய் - அடை-வெற்றிலை, காய்-பாக்கு

அடைப்புண்ணும் - உள்ளடங்குதல்.

அடைய வளைந்தான் - திருவரங்கம் திருக்கோயிலை [illegible] வரும் மதிளுக்கு அடைய வளைந்தான் என்று பெயர். திருவரங்க மாநகரை முழுவதும் சூழ்ந்து கொண்டிருப்பதனால் அம்மதிளுக்கு அடைய வளைந்தான் என்று பெயர் உண்டாயிற்று. திருவாய்மொழி [illegible] அமைந்த பெரிய [illegible] விளக்கத்துக்கு அடைய வளைந்தான் [illegible] என்று பெயர். [illegible] முழுவதும் சூழ்ந்து கொண்டு விளக்குவதனால் அடைய வளைந்தான் என்ப பட்டது என்பது [illegible]

அடையார்சீயம் - பகைவர்களுக்கு சிங்கம் போல [illegible] [illegible].

அடைவு - [illegible]

அடைவுகெட - முறைகெட.

அணுக்கன் வாசல - [illegible]

அத்தலைப்பாடு - அங்கே போய

அத்தவாளம - உத்தரீயம், [illegible]

அத்தாணிச் சேவகம - பிரியாத சேவை அருகிலிருந்து செய்யும் சேவை

| | |
|---|---|
| அத்திக்காயில் அறுமான் | அத்திப்பழத்தில் புழு, பூச்சி நிறைந்திருப்பது. |
| அத்தியூரான் | அத்திகிரியான காஞ்சியில் உள்ள வரத ராஜப்பெருமாள். |
| அத்தைப்பற்ற | அதைக் காட்டிலும் |
| அதாகிறது | அதாவது. |
| அதுவன்றியும் | அதுக்குமேலே. |
| அந்தகாலம் | முடிவுகாலம். |
| அந்தணர் கற்பு | பிராமணர்களாலே அத்யயநம் பண்ணப்படுகிற, கற்பு-கல்வியாய், பிரம வித்தை. |
| அந்தணர்மாடு | வேதம். |
| அந்தணர் மாட்டந்தி | வேதாந்தம். |
| அப்பூச்சி காட்டல் | கண்ணை இறுக்கிக் கொள்ளுதல், சங்கு சக்கரங்களைக் காட்டல். |
| அப்பாவி | கபடமில்லாதவன். |
| அம்மணம் | அரை இடுப்பு துடை முதலானவற்றுக்குப் பெயர். |
| அம்மான் பொடி | அம்மான் அம்மான் என்று சொல்லி பின் தொடரும்படியான சுக்குப் பொடி, கள்வர்கள் சிறுவர்களைத் தன்வயப்படுத்த அம்மான் என்று சொல்லி ஒரு பொடியைத் தூவினால் அவர்கள் அம்மான் அம்மான் என்று சொல்லிக் கொண்டே கள்வனைப் பின்தொடர்வர். |
| அய்யர் ஐயர் | பெரியார், தகப்பன், ஆசிரியர். |
| அய்யர் தடுக்கு | ஆசிரியர் வீடு. |
| அய்யன்பாழி | அய்யனார் கோயில். |
| அரவணையான் | அரவத்தைப் (பாம்பை) படுக்கையாக உடையவன். |
| அரவணை | ஸ்ரீரங்கத்தில் இரவில் கடைசியாக பெருமாள் அமுது செய்யும் சர்க்கரைப் பொங்கல். |
| அராட்டுப் பிராட்டு | போதும் போதாததாய். |
| அரவிந்தலோசனன் | தாமரைக் கண்ணன், திருமால் |
| அரவிந்தப்பாவை | திருமகள். |
| அரியணை | சிங்காசனம், அரி-சிங்கம், அதுஉள்ள படுக்கை-கட்டில் ஆசனம். சிங்கக் கால் போல் கால் அமைந்த ஆசனம் சிங்காசனம். |
| அரும்பதம் | அரிய சொல், அரும்பதவுரை அரும்பதவிளக்கம் ஆகியவற்றின் கருத்தமான சொல். |
| அருள்மாரி | மாரிபோல் அருளும் திருமங்கை ஆழ்வார். |
| அருளிச்செயல் | ஆழ்வார்களால் அருளிச்செய்த நாலாயிரத் திவ்யப்பிரபந்தம் |
| அருளிச்செய்தவன் | கொடுத்தருளியவன் |
| அரை குலைய தலை குலைய | இடுப்பு வேஷ்டியும் தலைமுடியும் குலையும்படி வேகமாக ஓடி வருதல். |
| அரைநாண் | இடுப்பில் கட்டும் சங்கிலி. |
| அரையர் | பெருமாளுக்கு திவ்யப்பிரபந்தம் விண்ணப்பிக்கும் வைணவர்கள். |
| அழிச்சாட்டம் | பொருளை அழித்து ஆடுவது; பொருள் அழிந்து போம்படி ஆடுவது. |
| அளாவியிருக்கை | கலந்திருக்கை. |
| அளாவி வருகை | தொட்டு வருகை |
| அறவிட்டு தான்: | ஜீவித்விற்றுப் பிழைத்தான். |
| அருக்கயம் | நீர்மாறாத, வற்றாதமடு. |
| அறிதுயில் | யோக நித்திரை. |
| அறுசுவை | அறுசுவை உண்டி: கைப்பு, புளிப்பு, உவர்ப்பு, கார்ப்பு, தித்திப்பு, துவர்ப்பு இப்படி ஆறுபடிப்பட்ட சுவையுடைய உணவு. |
| அன்று தொட்டும் | அன்று முதல் இன்று வரை, அன்றைக் கன்று. |
| அன்னபேசியும் | அப்படிப் பேசியும். |
| அன்னவசம் செய்தல் | உண்ட உணவுக்கு ஏற்ப இடம் வலம் படுத்துக்கொள்ளுதல. |
| அலகலகாக | தனித்தனியாக. |
| அலையெறிகை | நெடுந்தூரம் பரவுகை. |
| அன்யாபதேசம் | உள்ளுறையல்லாத வெளிப்பொருள். |
| அன்வயம் | ஒரு சொல்லோடு மற்றைச் சொற்களுக்கு ஏற்படும் இயைபு, சம்பந்தம். |
| அனுவாதம் | முன்னோர் கூறியதை மீண்டும் எடுத்துச் சொல்லல். |

(தொடரும்)



# ஆழ்வார்களும் அருளிச்செயல்களும்

திரு. தி. அ. கிருஷ்ணமாசாரியர் - திருப்பதி.

“பொய்கையார் பூதத்தார, பேயார், புகழ் மழிசையயன் அருளமாறன் சேரலர்கோன, துய்யபட்டநாதன் அனபரதாளதூளி நற்பாணன் நன்கலியன ஈதிவர் தோற்றத்தடை வாமிங்கு” (உபதேச ரதனமாலை 4) என்கிறபடியே ஆழ்வாரகள் பதின்மர் ஆவர. இவரகளோடு நம்மாழ்வாருக்குச் சிஷ்யரான ஸ்ரீமதுரகவிகளையும் பெரியாழ்வாருக்குப் பெண்பிள்ளையான ஆண்டாளையும் சேர்த்து ஆழ்வார்கள் பன்னிருவரென்பது உண்டு.



இவர்களில் ஆண்டாள் பூமிப் பிராட்டியாரின் அவதாரம். ‘அல்லிநாள் தாமரை மேலாரணங்கின் இன் துணைவி’ என்று திருக்கண்ணமங்கையாண்டான் இவளை ஸ்ரீமஹாலக்ஷ்மியின் தோழியான பூமிப்பிராட்டியாராக அருளிச்செய்துள்ளமை காணத்தக்கது. மேலும் வேதாந்த தேசிகர் கோதா ஸ்துதியில் ‘ஸாக்ஷாத் க்ஷமாம் கோதாம்’ எனறும், மணவாள மாமுனிகள உபதேச ரத்ன மாலையில் ‘எமக்காகவன்றோ இங் காண்டாள் (பூமிதேவி) அவதரித்தாள் ஆழ்வார் திருமகளாராய்’ என்றும் இவளை பூமிதேவியின் அவதாரமாகவே குறிததருளியிருப்பதும் இங்கு நினைக்கத்தகும். ‘தேவிமாராவார திருமகள் பூமி’ என்ற (திருவாய்மொழி 8-1-1) பாசுரத்தின் ஈட்டில் ‘பூமி’ என்பதற்கு ‘ஆண்டாளார்’ என்று .விவரித்துள்ளமையைக் கொண்டு மணவாள. மாமுனிகள் முன்காட்டிய பாசுரத்தில் ஆண்டாளென்ற சொல்லால் பூமிதேவியைக் குறித்தனரென்று கொள்க. பூமிப்பிராட்டிக்கு இயற்பெயரான ஆண்டாளென்ற சொல்லே அவளுடைய அவதாரமான கோதைக்கும் தொடர்ந்து வந்ததென்று, பிள்ளைலோகார்யசீயர் ‘ அன்ன வயல் புதுவை’ என்று தொடங்கும் தனியனுரையில் கூறியருளியதை இங்குக் குறிப்பிடுவது பொருத்தமானது.

மாறிமாறிப் பல பிறப்பும் பிறந்து ஸம்ஸாரிகளாகவே இருப்பவர்களில் சிலரை ஸ்ரீமந் நாராயணன் தனது இன்னருளுக்கு இலக்காக்கி ஞான பக்திகளை உண்டாக்கி தன்னுடைய திவ்யாத்மஸ்வரூபம். திவ்ய மங்களத்திருமேனி, அவ்விரணடின திருக்கல்யாண குணங்கள, ஸ்ரீவைகுண்டம் பிர

நிருதி மண்டலமென்னும் உபய விபூதிகள் இவையெல்லாவற்றையும் அவர்களுக்கு விளக்கமாக அறிவிக்க, அவர்கள் அவனருளிய பக்தியினாலே எல்லாவற்றையுமறிந்து அவனுடைய குணங்களாகிய கடலில் மூழ்கித் தரை கண்டவர்களாய் 'ஆழ்வார்கள்' என்று பெயர் பெற்றார்கள்.

இவர்கள் திறத்தில் நித்ய ஸூரிகளின் அம்சமும் உண்டு. பொய்கையாழ்வாரிடம் சங்கின் அம்சமும், பூதத்தாழ்வாரிடம் கதையின் அம்சமும், பேயாழ்வாரிடம் நாந்தகவாளின் அம்சமும், திருமழிசையாழ்வாரிடம் சக்கரத்தின் அம்சமும், மாறனென்னும் நம்மாழ்வாரிடம் ஸ்ரீஸேனைமுதலியாரின் அம்சமும், சேரலர்கோனான் குலசேகராழ்வாரிடம் கௌஸ்துபத்தின் அம்சமும், பட்டநாதனாம் பெரியாழ்வாரிடம் கருடாழ்வாரின் அம்சமும், அன்பர் தாள் தூளியான தொண்டரடிப்பொடியாழ்வாரிடம் வனமாலையின் அம்சமும், திருப்பாணாழ்வாரிடம் ஸ்ரீவத்ஸமென்னும் திருமறுவின் அம்சமும், கலியனாகிய திருமங்கையாழ்வாரிடம் சார்ங்கவில்லின் அம்சமும், மதுரகவிகளிடம் குமுதரென்னும் கணேசரின் அம்சமும் கலந்துள்ளதா எம்பெருமானாருடைய சிஷ்யரான கருடவாஹன பண்டிதர் பணித்த திவ்ய ஸூரி சரிதத்தில் பேசப்பட்டுள்ளது. இவ்வாழ்வார்களில் முதல் நால்வரும் மதுரகவிகளும் துவாபரயுகத்தின் இறுதியிலும், மற்ற ஐவரும் கலியுகத்தின் ஆதியிலும் அவதரித்தவராவர். மற்றுமுள்ள இவர்களது சரித விளக்கமனைத்தும் முற்கூறிய திவ்ய ஸூரி சரிதம் பின்பழகிய பெருமாள் சீயர் அருளிச்செய்த குருபரம்பரா பரபாவம் முதலிய புராதன நூல்களில் காணலாம்.

'பூதம் ஸிரோ, ஷ்ரதமஹாஹ்வய மக்ஷியுக்மம்,
பட்டார்யமாஸ்யம் அதபார்க்கவ மஸ்ய கர்ணம் ।
பாஹூஉவதந்தி குலசேகர யோகிவாஹௌ,
தோர்மத்ய நாபி சரணௌ இதராந் சடாரே: ॥'

என்றிந்த பிராசீந ச்லோகத்தில் நம்மாழ்வாரை அவயவி (முழுவுடல்)யாகவும், அவருக்குப் பூதத்தாழ்வாரைத் தலையாகவும், பொய்கை-பேயாழ்வார்களை இருகண்களாகவும், பெரியாழ்வாரைத் திருமுகமாகவும், திருமழிசையாழ்வாரைச் செவிகளாகவும், குலசேகராழ்வாரையும் திருப்பாணாழ்வாரையும் இருகைகளாகவும், தொண்டரடிப்பொடிகளைத் திருமார்பாகவும், திருமங்கையாழ்வாரை நாபியாகவும், மதுர கவிகளையும் ஆசார்ய ச்ரேஷ்டராய்ப் பின்பு அவதரித்த எம்பெருமானாரையும் திருவடிகளாகவும் ரூபணம் செய்துள்ளமையால், இவர்களுக்குள்ளே நம்மாழ்வார் முக்கியமானவரென்றும் ஏனைய அனைவரும் அவருக்கு அங்கங்களாவரென்றும் அறியப்படுகின்றது.

இந்த நம்மாழ்வார் ஆழ்வார்களுக்குள் முக்கியமானவர் என்பது மட்டுமேயல்ல. நம்முடைய ஆசாரிய பரம்பரையில் பெரிய பெருமாள் பெரிய பிராட்டியார் சேனை முதலியார் ஆகிய இம்மூவர்க்குப் பின்பு நான்காவது ஆசார்யராகவும் விளங்கி ஸ்ரீமந்நாதமுனிகளுக்கு நாலாயிரத் திவ்யப்பிரபந்தம் யோகரகசியம் ரஹஸ்யத்ரயம் முதலியவற்றையும் உபதேசித்து இன்றளவும் இடைவிடாமல் ஸ்ரீவைஷ்ணவ விசிஷ்டாத்வைத ஸம்ப்ரதாயத்தை வளர்த்து வரும் பெருமையும் இவரைச் சேர்ந்ததேயாகும்.

"லக்ஷ்மீநாதாக்யஸிந்தௌ சடரிபுஜலத: ப்ராப்ய காருண்ய நீரம்
நாதாத்ரௌ அப்யஷிஞ்சத் ததநு ரகுவராம்போஜசக்ஷுர் ஜராப்யாம்
கத்வா ஸ்ரீயாமுநாக்யாம் ஸரிதம் அத யதீந்த்ராக்ய பத்மாகரேந்த்ரம்
ஸம்பூர்ய ப்ராணிஸஸ்யே ப்ரவஹதி பஹூதாதேசிகேந்த்ர ப்ரமௌகை: ॥"

என்று எம்பார் அருளிய ச்லோகம் இக்கருத்தை வலியுறுத்துகின்றது. திருமகள் நாதனாகிய பெருங்கடலில் நம்மாழ்வாராகிய மேகம் கருணையாகிய நீரைப் பருகி, நாதமுனிகளாகிய மலையில் மழையாகப் பொழிந்தது. அந்நீர் உய்யக்கொண்டார், மணக்கால் நம்பி ஆகிய இரண்டு அருவிகளின் வாயிலாக ஆளவந்தாரென்னும் பெரிய ஆற்றினை அடைந்து, அதிலிருந்து (பெரிய நம்பிகள் முதலிய ஆசாரியர்கள் ஐவராகிய வாய்க்கால்களின் மூலமாக) எம்பெருமானாரென்றும் பெரியதோர் ஏரியைச் சேர்ந்து நிரப்பி, எழுபத்து நான்கு ஸிம்ஹாஸநாதிபதிகளென்னும் மதகுகளின் தொகுதிகள் வழியாக இவ்வுலகிலுள்ள உயிர்களென்றும் பயிர்களில் பலவகையாகப் பெருகுகின்றது என்பது இந்த ச்லோகத்தின் பொருள்.

தாம் தாம் தவமியற்றி அதற்குத் தக்கவாறு அளவுபட்ட அறிவாற்றலைப் பெற்ற பராசராதி முனிவர்களைக் காட்டிலும் ஸ்ரீமந்நாராயணனுடைய நிர்ஹேதுகமான (இயலபான-தவம் முதலிய காரணத்தால் உண்டாகாத) அருள் நோக்கைப் பெற்று அது காரணமாக அளவிறந்த அறிவாற்

றலகளை லபித்த ஆழ்வாரகள மிகமிக உயரந்தவர்களென றும, அம்மகரிஷிகளின பணித்த இதி காஸ புராணஙகளைவிட, ஆழ் வாரகள் அருளிசசெய்த திவ்யப் ரபந்தஙகள் பரம்பொருள, அத னையடைந்து பெறும் பயன, அப்பயனையடைவிக்கும வழி ஆகிய (தத்வம் புருஷாரத்தம் ஹிதம் ஆகிய)வற்றைத் தெளி வாகத் தெரிவிககின்றனவாகை யால் சாலவும் சிறந்தனவென் றும் பெரியவாச்சான் பிள்ளை தொடக்கமான ஸ்ரீவைஷ்ணவா சாச்சார்யர்கள் அருளிச்செயவர.

இம்மஹாநுபவர்களுக்குள்ளே முதலாழ்வார்களும் ஆண்டா ளும் அயோநிஜர்கள். அதாவது ஒரு தாய் வயிற்றிலிருந்து பிற வாமல் தாமே மலர்களிலிருந் தும் பூமியிலிருந்தும் தோன் றினவர்களென்றபடி. திருமழி சைப்பிரான் பார்க்கவ முனி வர்க்குக் கனகாங்கியென்ற அப் ஸரஸ்ஸினிடம் அவதரித்தவர். நம்மாழ்வாரும் திருமங்கையாழ் வாரும் நான்காம் வருணத் தில் அவதரித்தவர்கள். குலசே கரப்பெருமாள் சேரவரசர் குலத் தில் அவதரித்தவர். பெரி யாழ்வாரும் தொண்டரடிப்பொ டியாழ்வாரும் ஸ்ரீமதுரகவிகளும் ப்ராஹ்மணர்கள். திருப்பாணாழ் வார் பஞ்சமகுலத்தில் அவதரித் தவர். இவரை நெற்கதிரில் அவதரித்து, பஞ்சம சாதியின ரால் வளர்க்கப்பட்டவராகவும் கூறுவது உண்டு. இவர் கள் சிலர் தாழ்ந்த சாதியில் தோன்றியவராயிருப்பினும், பக வத் பக்தியின் பெருமையினால் உயர்ந்தவராகவே பெரியோர்க ளால் கருதப்பட்டனர்.

“மெய்யத்ராபிஜாயந்தே யோகிந:
ஸர்வயோநிஷு ।
ப்ரத்யக்ஷிதாத்ம நாதாநாம்
நைஷாம் சிந்த்யம் குலாதிகம் ॥”

(எலலாச சாதிகளிலும யோகி கள (ஸ்ரீமந்நாராயணா பக்தா கள) பாசுரஙகளைப்பாடி உல கத்தைத் திருத்துதலாகிய மிக மிக முககியமான காரியத் தைச செயவதற்கென்றே இட டுப பிறககிறாரகள ஸாக லாதமாககளுக்கும நாதனாகிய ஸ்ரீமந்நாராயணனை ஸாக்ஷாத காரம செய்த இவரகளை சாதி யின உயரவுதாழவுகளை ஆரா யாமல் கௌரவிகக வேணடும) என்ற பவிஷ்யோத்தர புராணச லோகம இங்கு ப்ரமாணமாக நினைக்கத் தககது.

மேலும்
“ந சூத்ரா: பகவத்பக்தா:
விப்ரா: பாகவதா: ஸ்ம்ருதா: ।
ஸர்வவர்ணேஷு தே சூத்ரா:
யேஹ்யபக்தா: ஜநார்த்தநே ॥”

(விஷ்ணு பக்தர்கள் சூத்ரரகளா யிருந்தாலும் அந்த பாகவதர்கள் ப்ராஹ்மணர்களாகவே கருதப் பட்டனர். ப்ராஹ்மண சாதியில் பிறந்தவராயிருப்பினும் விஷ்ணு பக்தியில்லாதவர்கள் சூத்ரர்களா கவே கருதப்பட்டனர்.) என்ற தோர் பழைய ச்லோகமும் இவ் விடத்தில் கருதத்தக்கதாகும்.

இவ்வுயர்ந்தசாஸ்த்ரார்த்த தத்துவத்தை உட் கொண்டே ப்ராஹ்மணச்ரேஷ்ட ரான ஸ்ரீமதுர கவிகள நம்மாழ் வாரை ஆசார்யராகத் தேர்ந்து அவரிடம் தத்வ ஹித புரு ஷார்த்தங்களின் உபதேசம் பெற் றூர். அதன் பின்புள்ள ஸ்ரீவைஷ் ணவாசாரியர் பெருமக்களனை வரும் நம்மாழ்வாரைத் தமது குலபதியாகக் கொண்டதற்கும் இதுவே மூலமாகும்.

இப்பெருமக்களுடைய அவதா ரத்தை ஸ்ரீபாகவதம் 11ம் ஸ்கந் தம் 5ம் அத்தியாயத்தில் வேத வியாச பகவான் குறிப்பாகக் காட்டியுள்ளார்.

“க்ருதாதிஷு ப்ரஜா ராஜந் கலௌ
இச்சந்தி ஸம்பவம் ।
கலௌ கலு பவிஷ்யந்தி
நாராயண பராயணா: ।
க்வசித் க்வசித் மஹாராஜ
த்ராவிடேஷு ச பூரிச: ।
தாமரபரணீ நதீயத்ர க்ருதமாலா
பயஸ்விநீ ।
காவேரீ ச மஹாபுண்யா ப்ரதீசீ
ச மஹாநதீ ।
யே பிபந்தி ஜலம் தாஸாம்
மநுஜா மநுஜேச்வர ।
தேஷாம் நாராயணே பக்தி:
பூயஸீ நிருபத்ரவா ॥”

(அரசே! க்ருதயுகம் முதலிய முந் திய யுகங்களில் பிறந்த மனி தர்கள்-தாங்கள கலியுகத்தில பிறகக வேணடுமென்று ஆசைப படுகின்றனர். (ஏனெனில) கலி யுகத்தில ஸ்ரீமந்நாராயண னையே தெய்வமாகவும பயனா கவும் அதைப்பெறும உபாயமாக வும் கொண்ட பக்தர்கள் ஆங் காங்கே உண்டாகப் போகின் றனர். சிறப்பாகத் தமிழ் நாடு களில் மிகமிக உள ளாகப்போகிறார்கள். தமிழ்நா டாவது தாமிரபர்ணீ வைகை பாலாறு காவேரீ மஹா நதீ முதலான நதிகள் ஓடுமி டமான பகுதியாகும். அந் நதிகளின் நீரைப் பருகு வோர்க்கு நாராயணனிடத்தில் பக்தி தடையின்றி அதிகமாய் உண்டாகும்.) என்று கூறப் பட்டுள்ளமை காண்க. க்ருதாதி யுகங்களில் வருந்திப்பெறவேண டிய விஷ்ணு பக்தியானது கலி யுகத்தில் இந்நதிதீரங்களில் அவ தரித்த ஆழ்வார்களின அருள் மொழிகளாலும் அந்நதிகளின் தூய நீரைப் பருகுவதாலும் மிக எளிதாக உண்டாகு மென்ற காரணத்தினால் முன் யுகங்களில் பிறந்த மனிதர்கள் கலியுகத்தில், அதிலும தமிழ் நாட்டில் பிறக்க ஆசைப்படுவ

தாக முனிவரபெருமான குறித துளளமை கருததககது.

இதுவரை ஆழ்வாரகளைப பறறிச சிறிது அனுபவித தோம. இனி அவரகள அரு ளிசசெய்த திவ்ய பிரபநதஙக ளையும சிறிது அனுபவிப்போம.

நமமாழவார் அருளிய திருவி ருததம, திருவாசிரியம், பெரிய திருவநதாதி, திருவாயமொழி ஆகிய இநநானகும் முறையே ரிக்வேதம, யஜுர்வேதம அதர்வ வேதம், ஸாமவேதமாகிய இந நான்கின் ஸாரமாகும். திரு மங்கையாழ்வார் அருளிச்செய்த பெரிய திருமொழி, திருக்கு றுநதாண்டகம், திருவெழுகூற்றி ருக்கை, சிறிய திருமடல், பெரிய திருமடல், திருநெடுந்தாண்டகம் எனனுமிவையாறும் அங்கங்கள். மற்றவர் அருளிய பதினான்கு பிரபந்தங்களும் உபாங்கங்கள் இவையனைத்தும் ஸ்ரீமந்நாரா யணனையே பரம்பொருளா கக் கூறுவதிலே நோக்குடை யவை. மஹாபாரதம் வேதத் திற்கு உபப்ரும்ஹண (விவ ரண)மாக இருந்தாலும், ஐந்தா வது வேதமாகவும் இருப் பது போல நம்மாழ்வார அரு ளியவை தவிர மற்றவை அவற் றுக்கு அங்கமாக இருந்தபோ திலும், வேதமாகவும் கருதப்படு கின்றன. இவற்றுக்கு வேத மாந்தன்மையும், அத்யயன உத் ஸர்ஜன ஆரம்ப காலங்களும் (ஓதுதலை விடும் காலமும் தொடங்கும் காலமும்) யாஜ் ஞவல்க்ய ப்ரஹ்மோபநிஷத்தில் குறிக்கப்பட்டுள்ளன.

“த்ராமிட ப்ரஹ்மஸம்ஹிதா:
ச்த்வாரோ வேதா: பவந்தி ।
தேவை சத்வாரோ வேதா:
நாராயணும்ச பூத
சடாரிணு ப்ரகாச்யந்தே
ஷட் அங்காநி கலிவைரிணு
ப்ராஜமாநாநி சேரச பட்டாத்யை:
நீப்யமாநா:
சதுர்த்தர விதயா: ஏதே காயத்ர்-
யாத்மகா: சதுர்விம்
சதிஸங்க்யா: சதுஸ்ஸஹஸ்ரகாதா:
த்ராவிட ச்ருதய:
வாஸுதேவ விஷயா: ப்ரவர்த்தந்தே
தத்ச அத்யயனம்
கிம்ரூபம்? கதம்ச கர்த்தவ்யம்?
தப்தசக்ராதிதாரணுத்
ஊர்த்வம் அத்யாபயேத் தைஷ்யாம்
ஸூர்யர்க்ஷே
த்ராமிடம் அதீயீத ஊர்ஜே
ஹி அஜர்க்ஷே ஹி
உத்ஸர்ஜநம்”
என்பதே அவ்வுபநிஷத்து.

த்ராவிட ப்ரஹ்ம ஸம்ஹிதை கள் நான்கும் நான்கு வேதங்க ளாகும். அவ்வேதங்கள் நான் கும் நாரயணனின் அம்சமான நம்மாழ்வாரால் வெளிப்படுத்தப் படுகின்றன. ஆறு அங்கங் கள் கலியினால் விளங்குகின் றன. குலசேகரர் பெரியாழ்வார் முதலானவர்களால் விளக்கம் பெறுவன மற்ற பதினான்கு வித்யைகள். இவையனைத் தும் காயத்ரீ ரூபங்களாய், இருபத்து நான்கென்னும் எண் ணையும் நாலாயிரப் பாசுரங் களையும் கொண்ட த்ரா விட வேதங்கள் ஸ்ரீமந்நாராய ணனையே விஷயமாகப் பெற்று நடக்கின்றன. அவற்றை ஓது வது எப்படி? எவ்வங்கத்தோடு செய்ய வேண்டும்? (என்றால்) தப்த சக்ராதிதாரணம் (காய்ச் சிய சங்கு சக்கரங்களை ஆசார் யரின் திருக்கையினால் சிஷ் யன் தன் தோள்களில் ஒற்றிக் கொள்ளுதல்) ஆனபின்பு ஆசார் யன் சிஷ்யர்களுக்கு ஓதுவிக்க வேண்டும். தைமாத ஹஸ்த நக்ஷத்திரத்தில் இத்திவ்ய ப்ர பந்தங்களைத் தொடங்க வேண் டும். கார்த்திகை மாத ரோஹி ணியன்று நிறுத்திவிடவேண் டும் என்பது முற்காட்டிய வட மொழி வசனங்களின் பொருள. இதுகாறும் நாலாயிர திவ யப் பிரபந்தங்கள் வேதம் போன றவை என்று அறிந்தோம். இனி இவை வேதஙகளைவிட உயரந தவை என்பதையும் நன்றாக அறிவோம்:

“அதீதத்ராவிடாம்நாயாம் ஸ்த்ரியம்
ப்ரஹ்மவிதம் நரம்
ஆரோப்ய தேவை: நிர்ணீதம்
துலாயாம் அதிகா வதூ: ।।
இத்யநேகை: ச முநிபி: குஷ்யதே
ஸகலஸ்ம்ருதௌ ।
தஸ்மாத் அத்யயனம் கார்யம்
த்ராவிடாம்நாய ஸந்ததே: ।।
(த்ராவிட வேதத்தை ஓதிய பெண்மணியையும் ப்ரஹம மென்னும் ஸம்ஸ்க்ருத வேத மோதின புருஷனையும் தரா சில ஏறறி, முற்கூறிய பெண மணி உயர்ந்தவள் என்று தேவர்களால அறுதியிடபபெற றது என்று பல முனிவரகளால் பல ஸ்மிருதி நூல்களில் உரக் கப் பேசப்படுகின்றது. ஆகை யால் தமிழ்வேதத்தொகுதியைக கட்டாயமாக ஓத வேணடும்) என்று பிரம்மாணட புராணத் தில் ஸநதகுமார திலீப ஸம வாதத்தில் குறிக்கப்பட்டுளளத னால் இது தெளிவாகின்றது.

பெருமாளுடைய திருவீதிப புறப்பாட்டில் ஸமஸ்கருத வேதம் முதலியவறறைப பின புறத்திலும் தமிழ் வேதங் களை முன்புறத்திலும ஓத வேண்டுமெனபது ஸ்ரீபாஞ்ச ராத்ர வாஸுதேவஸம்ஹிதை யில் கூறப்பட்டுள்ளதைக் காண போம்.

“ருகாதீந் தேவயாத்ராயாம்
தக்ஷிணதிஷு வை க்ரமாத்: ।
படேத் தேவஸ்ய பரத: ஸ்துதிரந்யா:
ப மாநுஷீ: ।।
புரதோ தேவ யாதராயாம்

த்ராவிட ச்ருதிலக்ஷணு: ।
ஆபத்தபாணயோ ஹர்ஷாத்
படேயு: பரமா:ஸ்துதி: ।।

(பெருமாளுடைய திருவீதி யுத்ஸவத்தில் பெருமாளுக்குப் பின்புறத்தில் தெற்கு முதலிய திக்குகளில் முறையே ருக்கு முதலான வேதங்களையும் மனிதரியற்றிய மற்ற துதிநூல்களையும் ஓதவேண்டும். பெருமாளுடைய முன்புறத்தில் தமிழ் வேதரூபமான உயர்ந்த ஸ்தோத்ரங்களை கைகளைக் கட்டிக் கொண்டு ஸந்தோஷத்துடன் ஓதக் கடவர்கள்) என்பதே அவ்வாஸுதேவ ஸம்ஹிதா வசனம்.

மேலும் அவ்வாஸுதேவ ஸம்ஹிதையிலே, மூன்று தலைமுறைகள் ஸம்ஸ்க்ருத வேதத்தையும் த்ராவிட வேதமான திவ்யப்ரபந்தத்தையும் அத்யயனம் செய்யாவிட்டால், ப்ராஹ்மண்மயம் அழிந்துவிடுமென்று கூறப்பட்டுள்ளது.

"ஸ்வசாகா த்ராவிடாம்நாயௌ
விச்சித்யேதே த்ரிபூருஷம் ।
ஸ்ரவதிஸ்ம யதஸ்தஸ்மாத்
ப்ராஹ்மணத்வமிதி ச்ருதி: ।।
த்ராவிடாம் நாயஸஹிதா (அ)
த்யேதவ்யா வைஷ்ணவ: ச்ருதி: ।
நிஷ்பலா தேந ரஹிதா
ஸாத்வப்ரணவமந்த்ரவத் ।।"

[ஒருவனுக்குத் தன் சாகையான (நான்கு வேதங்களில் தான் ஓத வேண்டிய பகுதியான) ஸம்ஸ்க்ருத வேதத்தினுடையவும் தமிழ்வேதத்தினுடையவும் அத்யயனம் மூன்று தலைமுறைகள் விட்டுப்போனால் அவனிடமிருந்து ப்ராஹ்மணத்வம் விலகிப் போய்விடுமென்று பெரியோர்கள் சொல்லக் கேள்வி. அதனால் விஷ்ணு பக்தர்களால் ஸம்ஸ்க்ருதவேதம் தமிழ் வேதத்துடன் கூடியதாகவே ஓதப்பட வேண்டும். தமிழ் வேதத்தை விட்டு ஸம்ஸ்க்ருத வேதத்தை ஓதினால் அது ப்ராணவத்தை விட்டு ஓதிய மந்த்ரம் போல பயனற்றதாகிவிடும்] என்பது காண்க.

சுப காரியங்களுக்கு முன்பும் அசுபகாரியங்களுக்குப் பின்பும் திவ்ய ப்ரபந்தத்தை ஓதவேண்டுமென்னும் விஷயம் ப்ரஹ்மாண்ட புராணத்திலும் வந்தத வாஸிஷ்டத்திலும் ஒரேவிதமாக குறிக்கப்பட்டுள்ளது.

"மந்த்ரேண ஆதிநா ஸ்தோத்ராந்தே
த்ராவிட ப்ரஹ்மஸம்ஹிதா ।
அத்யேதவ்யா த்விஜவரை:
ஆதயம் நிதிஸஹஸ்ரகம் ।।
சுபாதிஷு த்விஜவர்யை: ச
ஸர்வ ஸம்பத் சுபாவஹம்
ஸஹஸ்ர சாகாத்யயனம் காரயேத
ஸை த்விஜோத்தம: ।।
அசுபாந்தே விசேஷேண
த்ராவிட ப்ரஹ்மஸம்ஹிதா ।
அத்யேதவ்யா த்விஜவரை:
ஆசௌசாதவிநாசிநீ ।



கிருபபுரீஸ்வரர் திருக்கோயில்- திருவெண்ணைநல்லூர்.

[த்ராவிட பாஹுமயமறிந்தை ஸ்வதந்திர மின்மை பிறப்ப தற்று முன்பும் அஸ்வதந்த்ரத் திறப்பாற்றும் பின்பும் ஓதப் பட்ட வேதத்தில் பாஹும யென்றதயம் பாஹுமயென்றத் தமர்களைக் கொண்டு ஸ்வதந் திரத முன்பு ஓதுவிக்கப்பட்ட உயர்ந்த திருவாய்மொழியா னது எல்லாச் செல்வங்களை யும் மற்றுமுள்ள நன்மைகளை யும் பயக்கவல்லது. அஸ்வ தந்திரதப் பின்பு ஓதுவிக் கப்பட்ட திருவாய்மொழியாயி ரம் தீட்டாலுண்டாகும் பாவங் களை அறவே போக்க வல் லது. ஆகையால் அந்தணன திருவாய்மொழியை ஓதுவிக்க வேண்டும்] என்றது நோக்குக.

இறுதியாக, இவ்வாழ்வார்கள் விஷயத்திலும் அருளிச்செயல் கள் திறத்திலும், ஸகல திவ் யத் தலங்களிலும் கோயில் கொண்டெழுந்தருளியுள்ள எம் பெருமான்களுக்குள்ளே உயர்ந் தவனான ஸ்ரீரங்கநாதனாம் அழகிய மணவாளன் காட்டும் அபிமானத்தை ரஸிக வித்வத் ஸார்வ பௌமராய ஸ்ரீரங்கேச புரோஹிதராகிய ஸ்ரீபராசர பட டர் அருளிச் செய்த சலோக ரத்னத்தின் வாயிலாக அனுப விப்போம்.

"வித்யந்தே ஹி பராசராதி
முநிபி: ப்ரோக்தா:
ப்ரபந்தா: புரா, பக்தா ஏவ
ஹி தே ததாபி
ஸகலம் த்யக்த்வா(அ)த்ர
ரங்கேச்வர: ||
பக்தாநேவ பராங்குசாதி புருஷாந்
தத்தத் ப்ரபந்தாந் ச தாந்: |
அத்யாத்ருத்ய ஸதோபலாலயதி
யத் தத் ஜ்ஞாபநம் தத்ப்ரியே ||"

[பராசரர் முதலிய மகரிஷிகளால் முன்பே பணிக்கப்பட்ட இதி ஹாஸ புராணாதி க்ரந்தங்கள் இருக்கின்றன. அல்லவா? அம் மகரிஷிகள் பக்தர்கள் அல்லவா? அங்ஙனம் இருந்தும் ஸ்ரீரங்க நாதப் பெருமாள் அந்த மகரி ஷிகளையும் அவர்களின் நூல் களையும் விட்டு, நம்மாழ்வார் தொடக்கமான மஹாபுருஷர்க ளான ஆழ்வார்களையும் அவர் களருளிய அவ்வப் பிரபந்தங் களையுமே எப்பொழுதும் மிக வும் ஆதரித்து கௌரவித்துக் கொண்டாடுகிறார் என்பது, அவ் வாழ்வார்கள் திறத்திலும் அவ் வருளிச்செயல்கள் பக்கலிலும் அவ்வழகிய மணவாளன் வைத் துள்ள அன்பிற்கு அறிகுறியா கும்] என்றறிந்த பட்டர் பணித் தருளிய சலோகத்தை அனுஸந் திப்பவர்களுக்கு ஆழ்வார்களின் சீர்மையும் அருளிச் செயல்களின் சிறப்பும் நன்கு விளங்கும்.

மேலும் இவற்றை விளக் கமாக அறிய விரும்புவோர், ஸ்ரீகாஞ்சீ மஹாவித்வான் ப்ரதி வாதி பயங்கரம் அண்ணங்கரா சார்ய ஸ்வாமி அருளிய 'திவ்ய ப்ரபந்த வைபவ விவேக' என் னும் நூலின்கண் கண் செலுத் தும்படி வேண்டுகிறேன். அந் நூல் தமிழ் மொழி பெயர்ப்பு டன் பதிப்பிக்கப்பட்டு 7, தென் னன்டை மாடவீதி, திருவல்லிக் கேணி, சென்னை-600005 என்ற முகவரியில் கிடைக்கிறது.

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம். ✦

## தியானம்

தேக சுத்தி நீரினாலும், மனோ சுத்தி வாய்மையினாலும், புத்தி சுத்தி ஞானத்தினாலும், ஆத்ம சுத்தி தியானத்தினா லும் உண்டாகும்.

-சுவாமி சிவானந்தா.

## வாழ்க்கை

வாழ்க்கை என்பது பணக்காரர்களுக்கு ஒரு நகைச்சுவை நிகழ்ச்சி. முட்டாளுக்கு ஒரு விளையாட்டு. புத்திசாலிகளுக்கு ஒரு கனவு. ஏழைகளுக்கு ஒரு கவலைமிக்க நிகழ்ச்சி.

-யூதக் கவிஞன்.

## நன்றி

உங்களுடைய குற்றங்களை எடுத்துக்காட்டும் மனிதர்களி டம் நீங்கள் நன்றியுள்ளவர்களாக இருக்கவேண்டும்.

-சுவாமி சிவானந்தா.

தொகுத்தவர் கமலா மாரியப்பன் - கோவை.

# பகவத் கீதை

உமையொரியன்

## ஆறும் அத்தியாயம்

## தியான யோகம்

(தொடர் கட்டுரை)

பகவான் கூறியது

சுசௌ தேசே ப்ரதிஷ்டாப்ய
ஸ்திரமாஸனமாத்மன:।
நாத்யுச்ரிதம் நாதிநீசம்
சைலாஜினகுசோத்தரம்:।। (11)

"தூய்மையான இடத்தில், உறுதியுள்ளதும், அதிக உயரமும், அதிகத் தாழ்வும் இல்லாததும், துணி, மான தோல், தர்ப்பை இவைகளைக் கொண்டதுமான ஆசனத்தை நன்ருக அமைத்துக் கொள்ள வேண்டும்."

[இங்கு, அமரும் இடம் (ஆசனம்) எவ்வாறு இருத்தல் வேண்டும் என்பது மனிதனின் உள்ளம் மற்றும உடல் பாங்கினை மனதிற்கொண்டு மிக அழகாகக்கூறப்படுகிறது. சூழ்நிலை சுத்தமாக அமையும போது அறிவும, மனமும் குழப்பமின்றி அமைதியுடன் விளங்கும். பிறகு அமரும் இடம எவவாறு அமைககப்படவேண்டும் என்று விளக்கப்படுகிறது. அமரும் இருககை எவ்வித அசைவுகளுக்கு உட்படாதவாறு இருத்தல் வேண்டும். அடுககப்பட்ட மரத்துண்டுகளின் மீதோ, குவிக்கப்பட்ட கற்குவியல், மணற்குவியல் ஆகியவற்றின் மீதோ, இலை தழைகளைக் கொண்ட குவியல்களின மீதோ இருககையினை அமைததுக்கொள்ளக் கூடாது. ஏனெனருல் அவை எந்த நேரத்திலும் சரிந்து விடலாம். அதனால் அவற்றின் மீது இருந்திடும் இருககை தன நிலையினின்று தடுமாறலாம். அதனால் அந்த இருககை மீது அமர்நதிடும் யோகியின் 'ஒருமுனைப்பு' பலவாறு சிதறலாம். யோகி அமரும் இருக்கை எவ்வாறு இருககவேண்டும் என்று வலியுறுத்தப்படுகிறது. இருககையானது யோகிக்கு உடலின்ப உணர்வை எந்த நிலையிலும் தோற்றுவிக்ககூடாது. அதே நேரத்து இருககை யோகியை உட்கார முடியாதவாறு வந்ததககூடாது. இவற்றை மனதிற்கொண்டு, கண்ணன், இருககையின் அமைப்பை விளககுகிருர். இருககை பாறையாகவோ, கட்டப்பட்ட மேடையாக இருத்தல வேண்டும. நில மட்டத்திலிருநது மிக உயரமாகவோ (உட்காரும போது மனதில் விழுந்து விடுவோமோ என்ற அச்ச உணர்வு ஏறபடக் கூடாது.) தரையோடு தரையாகவோ (புழு பூச்சிகள் உடல் மீது ஊர்நது துன்பததைத் தரக் கூடாது என்பதற்காக) இருத்தல் கூடாது. இருககையானது முதலில் தர்பபைகளால படரப்பட வேண்டும. அதன்மீது மானதோல விரிககப்பட வேண்டும். அதன்மீது துணி ஒன்று விரிககப்பட வேண்டும. இது போன்ற இருககையே (ஆசனம்) மன ஒருமைப்பாட்டிற்குத் தக்கதாகும்.)

தத்ரைகாக்ரம் மன: க்ருத்வா
யதசித்தேந்த்ரியக்ரிய:।
உபவிச்யாஸனே யுஞ்ஜ்யாத்யோக
மாத்மவிசுத்தயே:।। (12)



"அங்கே ஆசனத்தில் அமர்ந்து, மனதை ஒருமுகப்படுத்திக்கொண்டு, மன ஓட்டத்தையும், ஐம்புலன் இன்பங்களையும் அடக்கிக்கொண்டு, சுத்தமான மனதை பெறும் பொருட்டு யோகம் பயில வேண்டும்."

[கண், செவி போன்ற ஐம் புலன்களின் வாயிலாக மனமானது அசுத்தமாகின்றது. ஆகவே மனம் தூய்மையாக விளங்க வேண்டுமாயின், புலனின்பங்களை நுகரும் எண்ணங்களைக் கட்டுப்படுத்த வேண்டும். இதுபோது அறிவும் ஆன்மாவும் மேன்மையடைகின்றன.]

ஸமம் காயசிரோக்ரீவம்
தாரயன்னசலம் ஸ்திர: ।
ஸம்ப்ரேக்ஷ்ய நாஸிகாக்ரம் ஸ்வம்
திசஸ்சானவலோகயன்: ।। (13)

"உடல், தலை, கழுத்து ஆகியவற்றை அசைக்காது நேராக வைத்துக்கொண்டு, உறுதியாக இருந்து, தன்னுடைய முக்கின் நுனியைப் பார்ப்பது போன்று, மற்றைய திசைகளை பார்க்காது இருக்க வேண்டும்."

[மனம் ஒடுங்குவதற்குரிய தியானத்தின் சிறப்பினை இச செய்யுளில் காணலாம். உடல், தலை, கழுத்து நேராக உறுதியாக இருந்திடும்போது முதுகுத் தண்டும் நேராக அமைகின்றது. அதுபோது உடல் முழுவதும் சீரான, நேரான, நிமிர்ந்த நிலையில் இருந்திடும் போது, மூச்சுக்காற்றின் போக்கு சீராக அமைகின்றனது. இதனால் மனதில் தேவையற்ற எண்ணங்கள் எழுவதில்லை. மனம் சஞ்சலமற்று இருக்கும் போது, உடலும், ஒரு குன்றினைப் போன்று அசையாது இருந்திடும். அந்த நிலையில் செவி, வாய், கண் போன்றன தங்கள் செயல்களை மறக்கின்றன. கண்கள் நிலைக்குத்தி, ஏதோ, அவரவரது மூக்கினைப் பார்ப்பது போன்று தோன்றும். இது, மனமானது ஆத்ம சொரூபத்தில் கலந்திட்ட நிலையினையே காட்டும்.]

ப்ரசாந்தாத்மா விகதபீர்ப்ரஹ்ம-
சாரிவ்ரதே ஸ்தித:।
மன: ஸம்யம்ய மச்சித்தோ யுக்த
ஆஸீத மத்பர:।। (14)

"உள்ளத்தில் அமைதி கொண்டு, பயத்தை அகற்றி, பிரம்மசர்ய விரதம் மேற்கொண்டு, மனதை அடக்கி, அறிவை என் பக்கம் இழுத்து வைத்து, என்னையே இலட்சியமாகக் கொண்டு யோகத்தில் உட்கார வேண்டும்."

[தெளிந்த குளம் போன்று ஒருவனுடைய மனமானது தெளிவாகவும் அமைதியுடனும் இருந்திடும்போது, அந்த மனமானது தூய்மையானதாக களங்கமற்றதாக விளங்குகிறது. அதுபோது உணர்ச்சிகளின்பால் மனம் அடிமை இல்லையாதலால், அச்சம் போன்ற உணர்ச்சிகளும் அங்குத் தோன்ற. மேலும் சிற்றின்ப உணர்ச்சிகளைத் தூண்டும் காம உணர்வினை மனம் மறந்திடும்போது அது மேலும் கட்டுப்பாடுள்ள தூய்மையான இடமாக விளங்குகிறது. அதுபோது இறைவனின் பற்றிய நினைவே அங்குத் தவழும். இறைவன் ஒருவனே நமக்கு இறுதிப்புகலிடம். அவனை அடைவதே நமது இலட்சியம் என்ற எண்ணங்கள் தோன்றிடும். அந்த நிலையில் அவன் சிறந்த யோகியாக, துறவியாகத் திகழுகின்றான்.)

யுஞ்ஜன்னேவம் ஸதாத்மானம்
யோகீ நியதமானஸ:।
சாந்திம் நிர்வாணபரமாம்
மத்ஸம்ஸ்தாமதிகச்சதி:।। (15)

"இவ்வாறு எப்போதும் மனதை தியானத்தில் வைத்து, உள்ளத்தை அடக்கிடும் துறவி, என்னிடத்தில் உள்ள, முக்தியில் கலந்துவிடுகின்ற அமைதியை பெறுகின்றான."

(இச்செய்யுளில் யோகத்தின பயன் கூறப்பட்டுள்ளது. யோக சாதனம் புரிந்து மனதை அடக்கியவன் இயற்கையாக மன அமைதி பெறுகின்றான். இதுவே இறைவனை அறியவும், முக்தி எனும் வாழ்க்கைப் பயனைப் பெறவும் வழிகோலுகின்றது.)

நாத்யச்னதஸ்து யோகோஸ்தி ந
சைகாந்தமனச்னத: ।
ந சாதி ஸ்வப்னசீலஸ்ய
ஜாக்ரதோ நைவ சார்ஜுன:।। (16)

"அர்ச்சுனா! அளவுக்குமீறி சாப்பிடுபவனுக்கு யோகமில்லை. (அதே நேரத்து) சிறிதும் உண்ணாதவனுக்கும் (அந்த) யோக மில்லை. அதே போன்று அதிகமாக தூங்குபவனுக்கும், அதிகமாக விழித்திருப்பவனுக்கும் யோகமில்லை."

உடம்பை வீணையைப் போன்று கையாள வேண்டும். வீணையின கம்பிகளை அளவுக்கு மீறி இழுத்துக் கட்டினால் கம்பிகள் அறுந்து போகும். கம்பிகளைச சரியாக இழுக்காமல் தொய்வாகக் கட்டினால் மீட்டும் போது ஓசை உண்டாகாது. ஆம் வயிற்று முட்ட உண்டால் சோமபல் உண்டாகும். உணவே சாப்பிடா விட்டால் உடலில் சக்தி இருக்காது. ஆகவே உணவு, காற்று,

நீர் ஆகியன சரியான அளவில் இருக்குமளவில வயிறு இருக்க வேண்டும். அதே போன்று தூக்கமும்கூட. எழுந்தவுடன் உடம்பு சுறுசுறுப்புடன் அமையும் வகையில் தூக்கம் மிதமாக இருத்தல் அவசியம். இதில் ஏற்றமோ குறைவோ அதிகமானால் தியானம் என்பது மனிதனுக்குக் கைகூடாது. மனிதன் பகலில் அதிகமாக உண்டாலும் இரவில் குறைவாகவே உண்ண வேண்டும் என்றும், கிளர்ச்சி தரும், சூடு பண்ணும் உணவு வகைகளை உட்கொள்ளக்கூடாது என்றும் ஸ்ரீராமகிருஷ்ணர் உபதேசிக்கிறார்.)

யுக்தாஹாரவிஹாரஸ்ய யுக்த
சேஷ்டஸ்ய கர்மஸு ।
யுக்தஸ்வப்னாவபோதஸ்ய
யோகோ பவதி து:கஹா ।। (17)

"அளவுடன் உண்டு, உடல பயிற்சி செய்பவனுக்கும், அளவுடன் வினைகளை செய்து, தூக்கத்தையும் விழிப்பையும் முறையாக மேற்கொள்பவனுக்கும் யோகமானது துன்பத்தை நீக்கிவிடும்."

(வாழ்க்கையில் எவரும் அளவுக்கு மீறிய உணர்ச்சிகளுக்கோ, உடல் பயிற்சிகளுக்கோ இடம் தரலாகாது. சீரான, நெறியான வாழ்க்கை வேண்டுமென்றால் மேற்கொள்ளும் பணியை முறையாகச் செய்ய வேண்டும். தேவையான உடல் ஆற்றலை கொண்டுதான், குறித்த காலத்தில்தான் எவரும் தங்களுடைய வினைகளை ஆற்றவேண்டும். இங்கு உடற்பயிற்சியின் முக்கியத்துவம் குறிக்கப்பெறுகிறது. அப்பயிற்சியும் முறையாக இருத்தலின் அவசியம் அறிவுறுத்தப் படுகின்றது. இதுபோது உள்ளமும் சலனமற்று விளங்கிடும். தியானமும் நன்கு கைகூடிய துன்பம். காற்றும் போன்ற உணர்ச்சிகள் மறைந்து போய் விடும்.)

யதா விநியதம் சித்தமாத்மன்
யேவாவதிஷ்டதே
நி:ஸ்ப்ருஹ: ஸர்வகாமேப்யோ யுக்த
இத்யுச்யதே ததா ।। (18)

"ஆசைகள் எல்லாவற்றினின்றும் விருப்பங்களை விடுவித்து, நன்றாகக் கட்டுப்படுத்தப் பட்ட மனமானது ஆத்மாவிலேயே இருந்திடும்போது ஒருவன் யோகத்தில் தேர்ந்தவனாகக் கருதப்படுகிறான்."

(இச்செய்யுளில் மறுபடியும் மனதில் எந்தவிதமான காமம், கோபம் போன்ற சலனங்களுக்கு இடம் தரக்கூடாது என்று வலியுறுத்தப்படுகிறது. தாய்மையான புனமும், அறிவுமே சிறந்த யோக சாதனத்திற்கு வழிகோலும்.)

யதா தீபோ நிவாதஸ்தோ
நேங்கதே ஸோபமா ஸ்ம்ருதா: ।
யோகினோ யதசித்தஸ்ய யுஞ்ஜதோ
யோகமாத்மன ।। (19)

"ஆத்ம தியான பயிற்சியை மேற்கொள்ளும் துறவியின் கட்டுப்படுத்தப்பட்ட மனமானது, காற்றில்லாத இடத்தில வைக்கப் பட்ட தீபத்தின அசையாதிருக்கும நிலைக்கு ஒப்பிடப்படுகிறது."

[காற்று இல்லாத அறையில் எரியும் தீபமானது, ஏதோ சித்திரம போன்று எந்தவிதமான அசைவுகளும் இன்றி நேராக எரியும். அது போன்று காற்று எனும் ஆசை இல்லாத துறவியின் மனம் எந்தவித தடுமாற்றம் இன்றி குழப்பம் இன்றி அந்த தீபம் போன்று விளங்கும்.]

யத்ரோபரமதே சித்தம் நிருத்தம்
யோகஸேவயா ।
யத்ர சைவாத்மனாத்மானம்
பச்யன்னாத்மனி துஷ்யதி ।। (20)

"யோகப்பயிற்சியினால் எப்போது அறிவானது நன்றாகக் கட்டுப்பட்டு அமைதி பெறுகின்றதோ, மேலும் எப்போது ஆத்மாவைக் கொண்டு ஆத்மாவை அறிந்து ஆத்மாவில் இன்பம் காண்கின்றனோ......"

(இச்செய்யுளில் ஆரம்பிக்கப் பட்ட கருத்து தொடர்ந்து அடுத்துவரும் செய்யுட்களிலும் தொடர்கின்றது.)

ஸுகமாத்யந்திகம் யத்தத்-
புத்திக்ராஹ்யமதீந்த்ரியம் ।
வேத்தி யத்ர ந சைவாயம்
ஸ்திதஸ்சலதி தத்த்வத: ।। (21)

"புலன்களுக்கு எட்டாததும், அறிவினால புரிந்துகொள்ளப் படுவதும், முடிவில்லாததும் ஆகிய எந்த இன்பத்தை துறவியானவன அறிகின்றானோ, எதில் நிலைத்தபின்பு ஆத்ம சொரூபத்திலிருந்து அவன் விலகுவதில்லையோ..."

[உண்மையான இன்பம் புலனின்பங்களால் பெறுவன அல்ல. அது ஆத்ம சொரூபத்திலேயே புதைந்திருக்கிறது. அதனை புலன்களால் அறிய முடியாது. அமைதியுடன் கூடிய, குழப்பமில்லாத அறிவினால் மட்டுமே அந்த ஆத்ம இன்பத்தை அனுபவிக்கமுடியும். ஆத்ம இன்பத்தை அனுபவித்த பின், வெளியுலக இன்பங்களுக்கு அவன் அடிமையாவதில்லை.]

யம் லப்த்வா சாபரம் லாபம்
மன்யதே நாதிகம் தத: ।

யளமினளதிதோ ந து:கேன
தநுறைப் விசால்யதே: ।।22।

"எதனைப பெறறு அதைவிட பெரியதொரு வேறு எநதவித யான லாபததை நினைபபதில லையோ, எதில நிலைபெறறு எநதவித பெரியதொரு துன பததாலும தாககபபடுவதில லையோ....."

[மிதிவண்டி வாங்கும் வரை அதனமேல ஒருவனுககு ஆசை இருககும். அதனை வாங கிய பிறகு அதனமீது கொண்ட ஆசை குறைந்து, ஸ்கூட்டர மீது அவன ஆசை பிறக் கிறது. அதனை பெற்ற பின்பு கார வேண்டுமென்று ஆசை பிறககிறது. இவ வாறு மனிதனுடைய ஆசை , அதனால் பெறபபடும இன பம் மாறிககொணடே இருக்கி றது. ஆனால இநத உல கததையெல்லாம் கடந்த அந்த பரம்பொருள் மீது கொண்ட ஆசையை, இன்பத்தைப் பெற றபின்பு, அதனைவிட பெரி யதொரு அதிகமான மதிப புள்ள பொருள வேறு இல்லை. எனவே அதுவே இறுதி இன் பம் தரவல்லது. கடலை அடைந்தபின மீனுககு வேறு எது பெரியதொரு நீரப்பரப்பாக இருக்க முடியும். பரமபொ ருளை அடைந்தபின் ஞானிக்கு வேறு எது அடையக்கூடிய பொருள! மேலும் துன்பம யாவும் உடலைப் பொறுத்தவ ரைதான். ஆனால ஞானியான வன உடலை ஒரு நிழலாகத் தான கருதுகினறான். நிழலை அடித்தால எவ்வாறு அதற்கு வலிக்காதோ, அதே போன்று ஆத்ம ஞானியின் உடல் அவ னைப் பொறுத்தவரை ஒரு நிழல் போன்றது தான்.]

தம் வித்யாத்து: களம்யோக-
வியோகம் யோகஸம்ஞிதம் ।
ஸ நிஸ்சயேன யோக்தவ்யோ
யோகோநிர்விண்ணசேதஸா ।। (23)

"அதுவே துனபத்தின் பிடியி லிருநது விடுவிககும் யோகம் எனபதை அறிநது கொளவா யாக. சிறிதும் தளராத மனது டன் உறுதியாகத் தொடர்ந்து அநத யோகததைக் கற்றுக கொள"

[மனிதன எப்போதும் இன் பத்தை அனுபவிககவே விரும்பு கினறான். அதனால் தன் அறி யாமையினால் தன்னைத்தானே ஆசைகளுககும், புலன்களுக்கும அடிமைப்படுத்திக் கொள்கின றான். ஆசைகளை விட டொழிதது அதனால் வரும துனபங்களிலிருந்து தன்னை விடுவிததுக்கொண்ட நிலையில் யோகம் அவனுக்கு எளிதாக வந தமைகிறது. மனதில் குழப்பம இருக்கும்வரை யோகம் சிறிதும் அவனுக்குக கைகூடாது.]

(தொடரும்)



திருப்புவனம் திருக்கோயில்



# "அஷ்டாதச ரஹஸ்யம்"

திரு. ஜி. இலட்சுமணன் - சேடப்பாளையம்.

ஸ்ரீவைஷ்ணவனாகப் பிறந்து பஞ்ச சமஸ்காரம் பெற்று ஆசாரியர் மூலமாக பாடம் கேட்க வேண்டிய நூல் அஷ்டாதச ரஹஸ்யம் ஆகும். ஸ்ரீவைஷ்ணவர்களுக்குக் கிடைத்த ஒரு பொக்கிஷமாகும். அஷ்டம்+ தசம் + ரஹஸ்யம = 8+10+ரஹஸ்யம் என்பது 18 ரஹஸ்ய நூல்கள் ஆகும். இதை சித்தாந்த சாஸ்திரங்கள் என்றும் கூறுவர். இவற்றில் கூறப்பட்டிருப்பவை முற்றிலும் நாலாயிரத் திவ்யப் பிரபந்தங்களின் கருத்துக்களும், வேதாந்தங்களின் நுண் பொருளுமாக திகழ்கின்றது. மணிப ப்ரவாள நடையில் சூத்திரங்களாக அமைந்துள்ளது.

அஷ்டா தச ரஹஸ்யம் என்ற நூலை செய்தவர் பிள்ளை லோகாசாரியார் ஆவார். இவருடைய தகப்பனார் ஸ்ரீரங்கத்தில் வடக்கு வீதியிலுள்ள திருமாளிகையில் குடியிருந்ததால் திருவீதிப் பிள்ளை என்ற திருநாமத்துடன் திகழ்ந்தார். இவ்வாசிரியரின் திருத்தாயார் ஸ்ரீரங்க நாச்சியார். திருத்தம்பி, அழகிய மணவாளப்பெருமாள் நாயனார் என்பது. இவர் பிரமசாரிய நிலையில் வாழ்ந்தவர். இவ ருக்கு ஆசாரியர் நம்பிள்ளை. தன் தகப்பனாரான வடக்குத் திருவீதிப் பிள்ளையிடம் திருவாய்மொழி முதலான திவ்யப் பிரபந்தங்களையும் ஈடு முதலான வியாக்யானங்களையும் ஸ்ரீபாஷ்யம் முதலான கிரந்தங்களையும் கேட்டு அதன்படி ஒழுகினார். இவ்வுலகில் எழுந்தருளியிருந்த காலம் பதினான்காம் நூற்றாண்டு ஆகும்.

இவ்வாசிரியரைப் பற்றி [illegible] பத்யநாயர் அருளிச் செய்ததாவது. "ஸம்ஸாரமாகிற பாம்பினால் கடிக்கப் பட்ட ஜீவனுக்கு உயிர் தரும் மருந்தாய் இருப்பவரும், வடக்குத் திருவீதிப்பிள்ளையின் குமாரரான பிள்ளையுலகாசிரியராம் ஆசாரிய மூர்த்தி உடையவருக்கு வணக்கம்" என்கிறார்.

லோகாசார்யாய குரவே
க்ருஷ்ண பாதஸ்ய ஸூநவே
ஸம்ஸார போகி ஸந்தஷ்ட
ஜீவ ஜீவாதவே நம:

[க்ருஷ்ண பாதஸ்ய - வடக்குத் திருவீதிப்பிள்ளைக்கு, ஸூநவே - திருக்குமாரராயும், ஸம்ஸார - ஸம்ஸாரமாகிற, போகி - பாம்பினால், ஸந்தஷ்ட - கடிக்கப் பட்ட, ஜீவ - ஜீவனபாதகளுக்கு, ஜீவாதவே - மருந்தாக இருப்பவரும், லோகாசாரயாய குரவே - பிள்ளை லோகாசாரியர் என்கிற குருவிற்கு, நம - வணக்கம்.]

ஒரு சமயம் மணவாள மாமுனிகள் ஆழ்வார் திருநகரியிலிருந்து திருவரங்கம் பெரிய கோயிலுக்கு எழுந்

தருளிய போது அந்த பிள்ளை லோகாசாரியர் வாழ்ந்த இடம் கண்டு, விழுந்து சேவித்து, அந்த மண்ணிலே புரண்டு புரண்டு எழுந்தார். "இதுவோ ரஹஸ்யம் விளைந்த மண்" என்று பிரதிபத்தி பண்ணி, அந்த மண்ணை எடுத்துக் கொண்டு வந்து தன் மடத்தில் ஓர் இடத்தில் பரப்பி அதன் மீது ஆசனம் போட்டு, அதன் மேல் தான் எழுந்தருளி வாழ் நாள் முழுவதும் ரஹஸ்யங் களை காலக்ஷேபம் செய்து பொழுது போக்கினார் என் றால் ஸ்ரீபிள்ளை லோகாசாரிய ரின் பெருமை நன்கு விளங்கும்.

நாம் உஜ்ஜீவனம் பெற பரம கிருபையால் அருளிய பதி னெட்டு ரகசியங்களாவன முமு க்ஷுப்படி, தத்வ த்ரயம், அர்த்த பஞ்சகம், ஸ்ரீவசந பூஷணம், அர்ச்சிராதி, ப்ரமேய சேக ரம், பிரபந்ந பரித்ராணம், ஸார ஸங்க்ரஹம், ஸம்ஸார ஸாம் ராஜ்யம், நவரத்ந மாலை, நவ வித ஸம்பந்தம், யாதருச் சிகப் படி, பரந்தபடி, ஸ்ரீய: பதிப்படி. தத்வ சேகரம், தனி த்வயம், தனி சரமம், தனி ப்ரணவம். இதில் கூறப்பட்டுள்ள விஷயங் களை சுருக்கமாகக் காண்போம்.

## 1. முமுக்ஷுப்படி :

இந்த க்ரந்தம் மூன்று பகு திகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. இதில் 278 சூத்திரங்கள் உள் ளன. திருமந்திரம், த்வயம், சரம ஸ்லோகம், இம்மூன்று மந் திரங்களின் பொருள்களை சூத் திர வடிவில் மிகச் சுருக்கமும் இன்றி, மிக விரிவும் இன்றி, வடமொழிக் கலப்பும் அதி கம் இன்றிப பத்து வகை அழ கும் பொருந்தக் கூறப்பட்டுள் ளது. இது மிகவும் அரிய கொண்ட நூல் ஆகும். இந்நூ லுக்கு ஸ்ரீமத் அழகிய மண வாள மாமுனிகளின் வியாக்கி யானம் அமைந்திருப்பது நாய கக் கல்லாக அமைந்திருக்கிறது. இதைக் கொண்டே அனைவ ரும் விரிவுரை செய்து கொண்டு இருக்கிறார்கள்.

## 2. தத்வ த்ரயம் :

தத்வ - உண்மைப் பொருள். த்ரயம் - மூன்று என்பது. இந் நூல் சித் ப்ரகரணம், அசித் ப்ரகரணம், ஈஸ்வர ப்ரகரணம் என்று மூன்று பெரும் பகுதிக ளோடு 202 சூத்திர யாப்பில் அமைந்துள்ளது.

சித் ப்ரகரணம்: ஜீவாத் மாவின் நிலையை விளக்குகி றது. இது 26வது அக்ஷரமாகத் திகழுகிறது. ஜீவாத்மா ஞான மயமாய், ஞானத்துக்கு இருப்பி டமாய், இந்த ஜீவன தேஹம், இந்திரியங்கள், மனம், ப்ரா ணன், புத்தி முதலியவற்றைக் காட்டிலும் வேறுபட்டவன். இந்த ஆத்மா கர்ப்ப, ஜன்ம, பால்ய, யௌவன, வார்த்தக, மரணாதி விகாரங்கள் இல்லா தது. இது அணு அளவாய் இருக்கும். புலன்களால் அறிய முடியாது, ஸ்வயம் ப்ரகாசமாய் இருக்கும், பகவானுடைய நிய மனத்துக்கு உட்பட்டது. அவ னால் தரிக்கப்பட்டவனாய் அவ னுக்கு அடிமையாய் இருக்கும் என்று சித் ப்ரகரணத்தில் கூறப் பட்டுள்ளது.

அசித் ப்ரகரணம்: அறிவற்ற ஜட பதார்த்தத்தை விளக்குவது. இது 24வது அக்ஷரமாய் திகழ் கிறது. இது ஞான சூன்யமாய், உருவமாற்றங்களுக்கு இருப்பிட மாய் இருக்கும். இதற்கு ப்ரக்ருதி என்று பெயர். இது மூன்று வகைப்படும். 1. சுத்த ஸத்வம் என்பது பரம பதம். 2. மிச்ர ஸத்வமா வது- ஸத்வ, ரஜஸ், தமஸ் ஸுக்கள் மூன்றோடுங்கூடி பத்த சேதநருடைய ஜ்ஞாநாநந் தங்களை மறைப்பதான ப்ருக் ருதி, அவித்யை, மாயை என்ற பெயர்களை உடையது. 3. ஸத்வ சூன்யம் என்பது கால மாகும்.

ஈஸ்வர ப்ரகரணம் இதில் பகவானின் ஸ்வரூபம், திரு மேனி, கல்யாண குணங்களு டன் லக்ஷ்மி, பூமி, நீளா நாய கனாக இருக்கும். எல்லா உல கங்களையும் படைத்து, காத்து, அழித்தல் பற்றியும் பரத்துவம், வியூகம், விபவம், அந்தர்யாமித் வம், அர்ச்சாவதார நிலைக் ளையும் விளக்கும்.

## 3. அர்த்த பஞ்சகம் :

அர்த்தம் - பொருள்கள், பஞ் சகம் - ஐந்து, ஐந்து பொருள் களின் தன்மைகளை விளக் குவது அர்த்த பஞ்சகமாகும். அதாவது 1. ஸ்வஸ்வரூபம், 2. பரஸ்வரூபம், 3. புருஷார்த்த ஸ்வரூபம் 4. உபாய ஸ்வரூபம், 5. விரோதி ஸ்வரூபம் என்பன. இதில் உள்ள ஒவ்வொரு விஷய மும் மறுபடியும் ஐந்து ஐந்தாக விளக்கப்பட்டுள்ளது.

1. ஸ்வஸ்வரூபம்: ஆத்மா வின் தன்மைகளைக் காட்டுவதா கும். அந்த ஆத்மாக்கள் ஐந்து வகைப்படும். நித்யர், முக்தர், பத்தர், கேவலர், முமுக்ஷுக்கள் என்பது.

2. பர ஸ்வரூபம் இறைவனு டைய தன்மைகளைக் காட்டுவ தாகும். இது ஐந்து வகைப்ப டும். அவை பரத்வம், வ்யூகம், விபவம், அந்தர்யாமித்வம், அர்ச் சாவதாரம் என்பது.

3. புருஷார்த்த ஸ்வரூபம் ஆத்மாக்களால் இறுதியில் வேண்டப்பெறுவது புருஷார்த்தமாம். அவை ஐந்து வகைப்படும். தர்ம, அர்த்த, காம, ஆத்மானுபவ, பகவதனுபவம் என்பது.

4. உபாய ஸ்வரூபம் ஒரு பலனை அடைவதற்குச் சாதனமாய் இருப்பது உபாயம் ஆகும். இது ஐந்து வகைப்படும். அவை கர்மயோகம், ஞானயோகம், பக்தியோகம், ப்ரபத்தியோகம், ஆசார்யாபிமானம் என்பது.

5. விரோதி ஸ்வரூபம் தாம் விரும்பியதை அடைய ஒட்டாமல் தடுக்கும் தடைகளின் தன்மை ஆகும். இது ஐந்து வகைப்படும். அவை, ஸ்வரூப விரோதி, பரத்வ விரோதி, புருஷார்த்த விரோதி, உபாய விரோதி, ப்ராப்தி விரோதி என்று கூறப்பட்டுள்ளது.

இந்த ஐந்து விஷயங்களை ஒவ்வொரு ஸ்ரீவைஷ்ணவனும் அறிந்து இருக்க வேண்டும். அப்படித் தெரிந்து கொண்ட நாளே பிறவியின் பயன் பெற்ற நாளாகக் கருதுகின்றனர்.

"பூர்வாசார்யார்கள் இதில் (அர்த்த பஞ்சத்தில்) அர்த்தம் அறிவதற்கு முன்பு தங்களைப் பிறந்தார்களாக நினைத்திரார்கள். இதில் அர்த்த ஜ்ஞானம் பிறந்த பின்பு, பிறந்த பின் மறந்திலேன் என்கிறபடியே இதனை யொழிய வேறு ஒன்றில் காலக்ஷேபம் பண்ணி அறியார்கள்" என்கிறார் பிள்ளை லோகாசாரியர் முமுக்ஷுப்படியில். இதுவே அர்த்த பஞ்சகத்தின் பெருமையை விளக்குகின்றது.

## 4. ஸ்ரீவசந பூஷணம் :

இந்த ப்ரபந்தம், வேத, வேதாந்தங்களின் கருத்துக்களை நன்றாகவும், விரிவாகவும் விளக்குகின்ற பெரிய நூலாகும். ஆசார்யர்கள் நடந்து காட்டிய வழிகளையும் தொகுத்துக் கூறுகிறது. இது ஸ்வாமி உலகிற்குக் கிடைத்தற்கரிய நூலாகும். இந்த நூலைப் பற்றி உபதேச ரத்தின மாலையில் ஏழு பாடல்களால் மாமுனிகள் வியாக்யானம் புகழ்ந்துள்ளார்.

பிள்ளை லோகாச்சார்யார் தம் பரம கிருபையால், பூர்வாசார்யர்கள் பரம ரஹஸ்யமாக அநுசந்தித்து வந்த அர்த்தங்களை எல்லாம், காருணிக தேவப் பெருமாள் நியமனத்தைச் சிரசாக வகித்து ஸ்ரீவசந பூஷணம் என்ற நூலைச் செய்தார் என்று பெரியோர்கள் பணிப்பர்.

'ஸ்ரீ' என்பது இதனுடைய பெருமையைக் குறிக்கும் அடைமொழியாகும். பூஷணம் ரத்னங்களாலான ஆபரணம். இது உடம்புக்கு அழகு தரும். அதுபோல பூர்வாசார்ய வசனங்களாலான இந்த பூஷணம் உயிருக்கு அழகு தரும் என்பதால் ஸ்ரீவசந பூஷணம் என்று இதற்குப் பெயர் இட்டனர்.

முன்னம் குரவோர் மொழிந்த
வசனங்கள்
தன்னை மிகக் கொண்டு கற்றோர்
தம் உயிர்க்கு மின்னணியாச்
சேரச் சமைத்தவரே சீர் வசன
பூடணம் என
பேர். இக்கலைக்கு இட்டார் பின்.
[உ.ர.மாலை.54]

இந்நூலில் புருஷகார வைபவம், உபாய ப்ரகரணம், அதிகாரி நிஷ்டா ப்ரகரணம், குரு ஸேவன ப்ரகரணம், நிர்ஹே[illegible] [illegible] ப்ரகரணம் [illegible] [illegible] [illegible] [illegible] [illegible] இதில் 463 ஸூத்திரங்கள் உள்ளன. இதற்கு ஸ்ரீமத் மணவாள மாமுனிகள் வியாக்யானம் [illegible] அருளியதாக அமைந்துள்ளது. இந்த நூல் [illegible] [illegible] [illegible]ளின் உதவியும் இன்று கிடைத்துள்ளது. இது படித்து இன்புற வேண்டிய ஒரு சிறந்த நூலாகும்.

## 5. அர்ச்சிராதி :

இது பரத்வ ப்ரகரணம், தவிதீய ப்ரகரணம், த்ருதீய ப்ரகரணம், சதுர்த்த ப்ரகரணம் என்று நான்கு பெரும் பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டு, திவ்ய பிரபந்தப் பாசுரங்களையும், வேதப் ப்ரமாணங்களையும் கொண்டு, வாக்கியங்களாக அமைக்கப்பட்டுள்ளது.

இதில் அநாதி காலமாக ஸம்ஸார ஸாகரத்தில் மூழ்கிக் கிடந்து நோவு படும் இச்சேதனன், பகவத் க்ருபை காரணமாக, ஸதாசார்ய ஸமாச்ரயணம் பண்ணி, உரிய காலத்தில் சரீரத்தை விட்டு, அர்ச்சிராதி மார்க்கத்திலே சென்று, ஆதிவாஹிகர்களால் பூசிக்கப்பட்டு, வைகுந்தத்தை அடைந்து, அங்கும் விசேஷ ஸத்காரங்களைப் பெற்று, எம்பெருமானை ஸேவித்து, நித்ய கைங்கர்யத்தில் ஈடுபட்டிருக்கும் க்ரமம் ஆகியன மிக அற்புதமாக விவரிக்கப்பட்டுள்ளன.

## 6. ப்ரமேய சேகரம் :

இது ஒரு சிறிய நூலாகும். ப்ரமேய சேகரம் - பிரமாணத

தால அறியப்படுவது என்பதா கும். இது உண்மை அறிவினைப் பிறப்பிக்கும்.

அதாவது இறைவனுடைய திருவருளைப் பெற்ற ஓர் உயிர் அடையத் தக்க பயன் இறைவனுடைய திருவடிகளில் செய்யும் தொண்டே என்பதை முறைப்படி விளக்கிக் காட்டப்படுகிறது. இந்நூல் என் 5 அரசிராதி நூலில் விரிந்துக் கூறியது இங்குச் சுருக்கமாகக் கூறப்பட்டுள்ளது. ஆகவே அரசிராதியும், பரமேய சேகரமும் ஒரே விஷயத்தை சுருக்கமாகவும், விரிவாகவும் கூறுகின்றன.

## 7. பிரபந்த பரித்ராணம் :

இது ஓர அறபுதமான நூல ஆகும். இதில, ஓர ஆத்மாவை தாய், தந்தை, அண்ணன், தமபி, உறவினர என்கிற சரீர பந்துக்களாலும், சூரியன், சந்திரன, தேவர்கள, ப்ரஹ்ம்மா, ருத்திரன முதலான தேவர்களாலும் ரக்ஷிக்கவே முடியாது என்று அறுதியிட்டுக் காட்டி, பின்பு, ஸ்ரீமந் நாராயணனலேதான ரக்ஷிக்க முடியும் என்பதைப் பல பரமாணங்களால அறுதியிட்டுக் காட்டியுள்ளார்.

இறைவன ரக்ஷிப்பதற்கு இந்த ஆதமாவிற்கு அகிஞ்சன்யமும், அநந்யகதித்வமும வேண்டும என்று இதில தெரிவிக்கப்படுகிறது. இது படித்து இன்புற வேண்டிய ஒரு சிறந்த நூலாகும்.

## 8. ஸார ஸங்க்ரஹம் :

சாரமான த்வயத்தின பொருளைச் சுருக்கிக் கூறுகின்ற காரணத்தைப் பற்றி இந்நூலுக்கு இப்பெயர் ஏற்பட்டது.

த்வயம் வேத சாரம் என்பர். இதில பத்து பதங்கள் உள்ளன. அந்தப் பத்துப் பதங்களின் பொருளையும் திருவாய்மொழியில ஒவ்வொரு பத்துக்களிலும் முறையே வைத்து த்வயத்தின் கருத்தையும் உட்பொருளையும் விளக்குகிறது. இது ஒரு சிறிய நூலாகும். திருவாய்மொழி கற்கவரும் பெற்ற மக்களுக்கு இது ஒரு துணை நூலாகும்.

## 9. ஸம்ஸார ஸாம்ராஜ்யம்

இதுவும் ஓர் அறபுதமான நூல. இது ஸம்ஸாரமாகிற அரசியலைப் பற்றிக் கூறுகிறது. அரசனுடைய படைவீடு போல்வது இவனுடைய இந்த உடல். இது முற்றுருவக அணியில் அமைந்துள்ளது.

இந்த உடலில் இருந்து கொண்டு அரசு புரியும் ஆன்மாவை, இறைவன் திருவருளாலே, இவனைத் திருத்தி, ஆசார்யனிடத்தில் க்ருதஜ்ஞதையும, பகவத் விஷயத்தில் ப்ரீதியும் உண்டாக்கி பிராட்டி புருஷகாரத்தால எம்பெருமான் எல்லா அபேக்ஷிதங்களையும தந்தருளுவான என்பது.

## 10. நவ ரத்ந மாலை :

இந்த நூல் பிரபந்நனானவனுக்கு உரியது ஆகும். ஒன்பது வகையான இரத்தினங்களால் அமைந்த மாலையைப் போன்றது. இது ஒன்பது வகையான பொருள்களைப் பற்றிக் கூறுகிறது.

1. தன்னையும 2. தனக்கு விரோதியான தேஹத்தையும், 3. தேஹத்தைப் பற்றி வரும் பந்துக்களையும், 4. ஸம்ஸாரிகளையும், 5. தேவதாந்தரங்களையும், 6. ஸ்ரீவைஷ்ணவர்களையும், 7. ஆசார்யனையும, 8. பிராட்டியையும், 9. ஈஸ்வரனையும நினைத்து இருக்கும் படி கூறுகிறது.

## 11. நவ வித ஸம்பந்தம் :

இதுவும பிரபந்நனுக்குரிய நூலாகும். அஷ்டாக்ஷர மஹா மந்திரமான திருமந்திரத்தில் இருந்து - பகவானுக்கும் உயிர்களுக்கும உள்ள உறவுமுறைகள் ஒன்பது வகையாகக் காட்டப்படுகிறது. அவையாவன.

1. பிதா-புத்திரன, 2. ரக்ஷக-ரக்ஷ்ய, 3. சேஷ-சேஷி, 4. பர்த்துரு- பார்யா, 5. ஞாத்ரு-ஞேய, 6. ஸ்வ-ஸ்வாமி, 7. ஆதார-ஆதேய, 8. சரீர-சரீரி, 9. போத்துரு-போக்ய என்பதாகும்.

இதை வல்லோர் வாய கொண்டு அறிந்து, உஜ்ஜீவனம பெற வேண்டும்.

## 12. யாத்ருச்சிகப் படி :

இதில மூன்று பிரிவுகள உள்ளன. முதல் பிரிவு திருமந்திரமான எட்டு எழுத்தின பொருளைக் கூறுகிறது. இரண்டாவது பிரிவில் சரம ஸ்லோகத்தின் பொருள கூறப்படுகிறது. மூன்றுவது பிரிவு த்வய மந்திரத்தின் பொருளைக் கூறுகிறது.

மூன்று பிரிவுகளும் மூன்று மந்திரங்களின விஷயத்தை மிகவும சுருக்கமாகக் கூறுகின்றன.

## 13. பரந்த படி :

இது யாத்ருச்சிகப் படியைப் போலவே, மூன்றுபெரும பிரிவுகளைக் கொண்டது. திருமந்திரம், சரம ஸலோகம, த்வயம் என்ற மூன்று மந்திரங்களின் பொருளைப் பரக்கக் கூறுவதாலும், வடமொழி ப்ரமாணங்

களை அடுக்கி அடுக்கி கூறுவதாலும் இது ஸேவிப்பதற்குக் கொஞ்சம் கஷ்டமாய் அமைந்துள்ளது.

### 14. ஸ்ரிய: பதிப்படி :

இதில் திருமந்திர ப்ரகரணம், சரம ச்லோக ப்ரகரணம், த்வய ப்ரகரணம் என்று மூன்று பகுதிகள் முறையே அமைந்துள்ளன. மூன்று மந்திரங்களின் பொருளை கொஞ்சம் சுருக்கமாகக் கூறுகிறது.

### 15. தத்வ சேகரம் :

தத்வம்-திருமால், சேகரம்-ஒரு அணி விசேஷம் என்பர். ஸ்ரீமந் நாராயணன் ஒருவனே பரம் பொருள் என்பதை, வேதம் முதலிய பல நூல்களில் இருந்து நிறைய வடமொழி பிரமாணங்களைக் காட்டி உறுதிப்படுத்தப் படுகிறது.

இதில் பரஸ்வரூபம், ஜீவாத்ம ஸ்வரூபம், புருஷார்த்த ஸ்வரூபம், விரோதி ஸ்வரூபம், உபாய ஸ்வரூபம் என்ற ஐந்து விஷயங்களையும் வேதம், உபநிஷத்துக்கள் முதலான பற்பல பிரமாணங்கள் ஆதாரங்களால் நிலை நாட்டி, அது தர்க்க முறையில் விவாதித்தும் விரித்தும் காட்டப்பட்டுள்ளது.

### 16. தனி த்வய ரஹஸ்யம் :

த்வயத்தை மந்திர ரத்னம் என்று கூறுவார்கள். இது இருபத்தைந்து அக்ஷரமாய், ஆறு பதமாய், பத்து அர்த்தமாய் அனுஸந்தேயமாய் இருக்கும் என்று காட்டப்பட்டுள்ளது. உத்தர வாக்யத்தின் தாத்பர்யம், பூர்வ வாக்யத்தின் தாத்பர்யம் என்று காட்டி, த்வயத்தின் அர்த்தத்திற்குச்சேர பூர்வாசார்யர்களின் அனுஷ்டானத்தையும் காட்டியுள்ளார்கள்.

### 17. தனி சரமம் :

இரண்டு வாக்யமாய், பதினொரு பதமாய், முப்பத்திரண்டு திருவக்ஷரமாய் இருக்கும். இது பூர்வார்த்தத்தாலே அதிகாரி க்ருத்யம் சொல்லுகிறது. உத்தரார்த்தத்தாலே ஈஸ்வர க்ருத்யத்தையும் அதிகாரி க்ருத்ய சேஷத்தையும் சொல்லுகிறது. இவ்வாறு சரம ச்லோகத்தின் விஷயத்தைப் பரக்கக் காட்டி,* நிரபரத்வாநுஸந்தானம் சொல்லி தலைக்காட்டுகிறார்.

### 18. தனி ப்ரணம் :

ப்ரணவம் என்பதே மந்திரம் என்று சொல்ல வேண்டும். இதனுடைய விரிவுதான் "நமோ நாராயணாய"வின் பொருள் என்பார்கள். ஆகவே இது ஸாரத்தானது. ஒன்று ஸாரத்தான் 'அ', 'உ', 'ம' என்றும் இருக்கும்.

திருமந்திரத்தின் நம பூர்வாசார்யர்கள் ஸேவிப்பது சொல்லுகிறது என்றும், ப்ராப்யந்த சொல்லுகிறது என்றும், இரண்டு படி வாக்யார்த்தம் என்றும் கூறுவார்கள்.

இதில் பூர்வர்கள் அனுஷ்டானங்களும், வேத பாராயணங்களும் காட்டப்பட்டுள்ளன.

திருவள்ளுவர் "கற்றதனால் ஆய பயன் என்?" என்கிறார். ஆகவே கற்க வேண்டிய நூல்களான 18 ரஹஸ்யங்களையும், முறையாக ஆசாரியர் மூலம் கேட்டு இறைவன் திருவடிகளை அடைவதே பயன். ஆகவே பயனில்லாத நூல்களை கற்பதைவிட, ஆத்ம உஜ்ஜீவனத்திற்காகப் பயன் உள்ள நூலாக உள்ள அஷ்டாதச ரஹஸ்யத்தைக் கற்பதே இறைவன் திருவடிகளுக்குச் செய்யும் கைங்கர்யமாகும்.



### திருமலை மற்றும் அதனைச் சுற்றி உள்ள இடங்கள்

**ஸ்வாமி புஷ்கர்ணி :** கோயிலுக்கருகிலுள்ள இப்புஷ்கரிணி மிகவும் புனிதத்தன்மை கொண்டது. கோயிலுக்குப் புகுமுன், யாத்திரிகர்கள் இக்குளத்தில் ஸ்நானம் செய்தல் வேண்டும்.

**ஆகாச கங்கை :** கோயிலுக்கு வடக்கே 3 கி.மீ. தொலைவில் இந்நீர்வீழ்ச்சி உள்ளது.

**பாபவிநாசம் :** கோயிலுக்கு வடக்கே 5 கி.மீ. தொலைவில் உள்ளது.

**வைகுண்ட தீர்த்தம் :** கோயிலுக்கு வடகிழக்குத் திசையில் 3 கி.மீ. தொலைவிலுள்ளது.

**தும்புரு தீர்த்தம் :** கோயிலுக்கு வடக்கே 10 கி.மீ. தொலைவிலுள்ளது.

**அதிசய கல்வளைவு :** கோயிலுக்கு வடக்கே 1 கி. மீ. தொலைவில் இவ் அதிசய கல்வளைவு உள்ளது.

# திருநெல்வேலி நகர்

திரு. க.ச. பெரியநாயகம் - தேவநல்லூர்.

இந்தியப் பெருநாட்டின் தென்கோடியில் அமைநத பாண்டியநாடடின் பழமபெரும் கோயில்களில் ஒன்றுன திரு நெல்லையப்பர் கோயில் உலகப் புகழ்பெற்ற ஒரு சிறந்த கோயி லாக விளங்கி வருவதை தமிழ் பேசும் அனைவரும் உணர் வர். உலகெங்கும் உள்ள சிவாலயங்களில் அமைநதுள் ளது ஒரே லிங்க வடி வம் மட்டுமே. ஆனால திரு நெல்வேலிப் பட்டணத்தில் அமைந்துளள சிவன கோயிலில் அமைந்துள்ளது இரண்டு சிவ லிங்க திருவுருவஙகளாகும.

முதல் லிங்கம் கோயிலின் கரு வறையில் பள்ளத்தில் அமைநத லிங்கமாகும். இந்த லிங்கத் திற்குதான் திருநெலலையப்பர் என்ற சிறப்புப் பெயர் உண்டு. நெல்லையப்பர் என்ற காரணப் பெயர் ஏற்படக் காரணமான கதையொன்றை மேற்கொண்டு படிக்கலாம்.

பல ஆண்டுகளுக்கு முன்னர் வேதப்பட்டர்என்பவர் பள்ளத்து லிங்கத்தைப் பூசை செய்து வந் தார். ஒருநாள் லிங்கத்தின் முன் னால் நெல்குவியல் ஒன்றை பரப்பிக்காயப் போட்டு விட் டுச் சிந்துபூந்துறைக்குத் தாமி ரவர்ணி ஆற்றில் நீராடி வரச் சென்ருர்.

தாமிரவர்ணி ஆற்றில் நீராடி முடித்த வேதப்பட்டர் திருக் கோயில் நோக்கித்திரும்பினார். அச்சமயம் பார்த்து மேகங் கள் கறுத்து மழையை சோ எனப் பெய்தது. வேதப்பட் டர் நெல்லைப் பற்றி கவலை கொண்டு ஓடோடி வந்து நெல் லைப் பார்க்கையில் நெல்லின் மேல் மட்டும் சூரிய ஒளி வீசிக் கொண்டிருந்ததைக் கண்டு ஆச் சரியப்படடார். நெல்லைச் சுற் றிலும் மழைநீர் ஓடிக்கொண் டிருந்தது. சற்று நேரத்தில் மழையும் ஒய்ந்தது.

வேதப்பட்டர் சிவபெருமானை நோக்கி மந்திரமொழிகள் கூறி வழிபட்டு நெல்லைப் பத்திரப் படுத்தி மகிழ்ந்தார். வேதப்பட் டரின் அன்பின் சேவைக்காக மகிழ்நத சிவபெருமான் நெல் லில் மட்டும் சூரியக் கதிர் களைப் பாய்ச்சி நெல்லைக் காத்தக் காரணத்தால் நெல்லை யப்பர் என்ற பெயரைப் பெற் ருர். இன்றும் மக்கள் அனைவ ரும் திருநெல்லையப்பர் என்றே திருநெல்வேலியுறையும் சிவலிங் கத்தை அழைத்து வருகின்ற னர்.

கோவிலின் கருவறையில் மேட்டுலிங்கம் என்று அழைக் கப்படும் வேணுவன நாதரே இரண்டாவது லிங்கம் ஆகும். முதல் லிங்கமாகிய திரு நெல்லையப்பர் சுவாமிக்குப் பல ஆண்டுகளுக்கு முன்னால் ராமக் கோனார் என்பவர் பாற் குடம் சுமந்து சென்ருர். ஒரு நாள் பாற்குடம் உச்சிக்கால அபி டேகத்திற்குக் கொண்டு செல்லு கையில் மூங்கில் கணு ஒன்று இடறிப் பால்குடம் கீழே கொட் டியது. பால் முழுவதும் வீணு யிற்று. மறுநாளும் மூஙகிற் கணுவால கால் இடறிக் பால் முழுவதும் கொட்டியது.

மூன்ருவது நாள் தன்னு டைய மனைவியின் ஆலோ சனைப்படி கையில் கோடா ரியுடன் சென்று மூங்கில் கணுவை வெட்டி எறிந்தார். வெட்டிய இடத்தில் இரத்தம் பீறிட்டு எழுந்தது. ராமககோ னார் பதறிப்போய் மணப்படை யில வாழ்நத பாண்டியமன்னன் அரண்மனை சென்று செய் தியை மன்னனுக்குத் தெரிவித் தார். நற்செயதி கேடட மன் னன் பரிவாரங்களுடன் வந்து இரத்தத்தை நீக்கி இடத்தை சுத் தம் செய்யும் பொழுது அங்கு ஒரு லிங்கம் இருப்பதைக் கண டான்.

அந்த லிஙகமானது பாண் டிய மன்னனின் வேணடுகோ ளின்படி இருபபத்தோரடி மேல் நோக்கி வளரந்து பாண்டிய மன்னனுககுக் காடசி கொடுத் தது. பாணடிய மன்ன னும் மூங்கிற்காட்டிலே தோன் றியலிங்கத்திற்கு வேய்முத்தர் என்ற திருநாமம் சூட்டி மகிழந் தான். மக்களும் அந்த லிங் கத்தை வேணு வனநாதர் என அழைத்துப் போற்றி மகிழ்ந் தனர். நெலலையபபர் என்றும், வேய்முததர என்றும் இரண்டு லிஙகங்கள இன்றும் திருநெல் வேலிச் சிவன் கோயிலினுள் அமைந்துள்ளன.

இத்திருககோயிலை கி.பி. ஏழாம் நூற்றுண்டில் கூன்பாண்

டியனும் பிற்காலப் பாண்டியர்களும் விரிவுபடுத்திக் கட்டி முடித்தனர். திருக்கோயிலிலுள்ள ஆயிரங்கால் மண்டபம், ஊஞ்சல் மண்டபம், கருமாரி மண்டபம், ஆறுமுகர் மண்டபம், சோமவார மண்டபம், மணி மண்டபம், திருக்கோயில் உள் மண்டபம் முதலிய மண்டபங்களுடன் நான்கு கோபுரங்களும் கொண்டு திருநெல்லையப்பர் திருக்கோயில் சிறப்புற்று விளங்குகிறது. இத்திருக்கோயிலில் உள்ள வசந்த மண்டபமும் சங்கிலி மண்டபமும் பார்க்கத் தக்கன.

பஞ்ச சபைகளுள் ஒன்றான தாமிர சபையும், கயிலை மலைச் சிறபமும் பார்க்கத்தக்கன. திருக்கோயிலின் உள்ளே அறுபத்து மூவர் சன்னதியுள்ளது. தேவி காந்திமதியம்மைக்குத் தனிக்கோயில் உள்ளது. திருக்கோயிலினுள் பொற்றாமரைக் குளம், கருமாரிக்குளம் என்ற இரு குளங்கள் உள்ளன. கோயிலின் முகப்பில் உள்ள மாக்காளை என்ற நந்தியம் பெருமான் பார்க்கத்தக்கது. தங்கமூலாம் பூசிய கொடிமரங்கள் மூன்று உள்ளன. சிவன் கோயிலில் இரண்டு கொடிமரங்களும் தேவி கோயிலில் ஒரு கொடிமரமும் கொண்டு தமிழ் மக்களின் பண்டைய கலாசசாரத்தை உலக மக்களுக்கு விளக்கிக் கொண்டு இன்றும் திருக்கோயில் பொலிவுடன் விளங்குவதைக் கண்டு யாவரும் மகிழலாம்.

திருக்கோயிலுக்கு கி.பி. ஏழாம் நூற்றாண்டில் விஜயம் செய்த திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் பதினொரு தமிழ்ப்பாடல்கள் பாடி சிவபெருமானைப் போற்றியிருக்கின்றார்.

மேலும் திருநாவுக்கரசர், சுந்தரமூர்த்தி நாயனார் போன்றோர்களாலும் பாடல் பெற்ற தலமாக திருநெல்வேலி நகர் விளங்குகின்றது. தமிழ்நாட்டில் மொத்தம் பாடல் பெற்ற தலங்கள் இருநூற்று எழுபத்து ஐந்தாகும். தற்காலத்தில் மொத்தம் எண்ணாயிரம் தேவாரங்கள் அழியாது அச்சிட்டு நூற்கள் இருக்கின்றன. திருவாசகம் பாடல்கள் மொத்தம் ஆயிரம் இருக்கின்றன.

திருமந்திரம் மூவாயிரமும் பெரியபுராணம் ஐயாயிரமும் பதினோராம் திருமுறை இரண்டாயிரமும் தெய்வீக நூற்களாக நெல்லையப்பரின் புகழ் பரப்பி நிற்கின்றன. ✲



திருவாடானைத்திருக்கோயில்
(ஆட்டுத்தலையும், யானை உடலும் கொண்ட
விலங்கு வழிப்பட்ட திருத்தலம்)

# தக்ஷிணாமூர்த்தியின் உபதேசம்

திரு. வெ. சுந்தரமய்யர் - பரமக்குடி.


தக்ஷிணாமூர்த்தி

கைவிரல்கள் ஐந்திலும், கட்டைவிரல் தனித்து நிற்கும். பிற நான்கு விரல்களும் சேர்ந்திருந்தும், கட்டை விரலையும் சுட்டு விரலையும் இணைத்துக் காட்டி மற்ற மூன்று விரல்களையும் நேராகக் காட்டுவது சின் முத்திரை.

கையை விரித்தால் கட்டை விரல் தனித்து அமையும். அதுவே ஆண்டவனின் அடையாளம். சுட்டு விரல் ஆன்மா. நடுவிரல் ஆணவம். மோதிரவிரல் கன்மம். கடைசி விரலான சுண்டுவிரல் மாயை.

ஆணவம், கன்மம், மாயையுடன் ஆன்மா சேர்ந்து துன்பப்படாமல் ஆண்டவனிடம் பணிந்தால் மேல நோக்கி வந்து ஆன்மாவை அரவணைத்துக் கொள்வான்.

"நான்" என்ற அகம்பாவம் ஆணவமாகும். கரவுடன் அகந்தைக்குத் துணை நின்று துன்பகாரியங்களைத் தூண்டுவதே கன்மம். நம்மிடம் இருக்கும், ஆனால் நமக்குத் தெரியாது. வேலை செய்வது போன்ற ஒரு மாயைத் தோற்றத்தை ஏற்படுத்தி ஒன்றும் செய்யவிடாது குழப்பத்தை ஏற்படுத்தும் மாயை.

மற்ற விரல்கள் இணைந்து வேலை செய்வது உண்டு. சுண்டுவிரல் இணைந்து வேலை செய்வது போல தோற்றமளிக்கும். எதுவும் செய்யாது. இதுவே மாயை. நம்மிடம் இருப்பதை மறைத்தும், இல்லாததை இருப்பது போலவும் காட்டும்.

இந்த ஆணவம், கன்மம், மாயை ஆகியவற்றிலிருந்து ஆன்மா விடுபட வளைந்து ஆண்டவனை நோக்க, ஆண்டவன் எழுந்து அருள்புரிவான் என்ற தத்துவ விளக்கம் தக்ஷிணாமூர்த்தியின் உபதேசமாகும்.

தெற்கேயுள்ள காலன் அழைக்குமுன் உண்மையுணர்வாயாக எனத் தெற்கு நோக்கியமர்ந்துள்ளான்.

காலன் - யமன், காலத்தை அறிந்தவன்.

கால் - அவன் - காற்றினை (உயிரை) அவனே எடுப்பவன். அவனிடம் செல்லுமுன் அஞ்ஞானமகற்றி மெஞ்ஞானம் கொண்டால் அவன் திருவருள் கூடும்.

## வெற்றிலை

சிவனுக்கு உரியது வில்வ இலை.
சக்திக்கு உரியது வேப்பிலை.
திருமாலுக்கு உரியது துளசி இலை.
கணபதிக்கு உரியது அருகம்புல்.
பிரமனுக்கு உரியது அத்தி இலை.
எல்லாத் தெய்வங்களுக்கும் உரியது வெற்றிலை.

## நெருப்பு

நெருப்பை வாயினால் ஊதக்கூடாது. கை அல்லது ஓமக்குழலால் ஊத வேண்டும். அசுத்தமானப் பொருட்களை நெருப்பில் போடக்கூடாது. புழு பூச்சிகளை நெருப்பில் போட்டுப் பார்ப்பது பெருங்குற்றமாகும்.

-இந்து தர்ம சாஸ்திரம்.

# ஸ்ரீ வேங்கடேஸ்வரா காடு மேம்பாட்டுத் திட்டம்

காடு வளர்ப்பு அவசியத்தை முன்னிட்டும் அரிய மரம், மூலிகை, கனிவகைகளை பயிரிடும் முக்கயத்துவத்தைக் கருத்திற்கொண்டும், குறிப்பாக திருமலையைச் சுற்றியும், மற்றும், திருப்பதி மலைச் சரிவுகளையும் சார்ந்த காட்டுப்பகுதியாக மாற்றி, ஓர் அழகான இயற்கை சூழ்ந்த தோற்றத்தை ஏற்படுத்திடும் வகையில் தி.தி. தேவஸ்தானத்தின் வனத்துறை கடந்த பல ஆண்டுகளாக பலவேறு முயற்சிகளை மேற்கொண்டு வருகின்றது. இவ்வகையில் இம்முயற்சியினை மேலும் தீவிரமாக்கிடும் வகையிலும், இம்முயற்சியில் வேங்கடவன் பக்தர்ளையும் பெருமளவில் பங்கேற்க செய்யவும், தி.தி. தேவஸ்தானம் கீழ்வரும் பல புதிய காடு வளர்ப்பு மேம்பாட்டுத் திட்டங்களை மேற்கொணடுள்ளது. இத்திட்டங்களை நாட்டிலுள்ள பக்தர்கள் ஓர் அரிய வாய்ப்பாகக் கொள்ளுமாறு கேட்டுக் கொள்ளப் படுகிறுர்கள்.

### விருக்ஷ ஸம்வர்த்தனம்

(மரம் வளர்ப்புத் திட்டம்)

இத்திட்டத்தின் கீழ் ஒரு ஏக்கர் நிலம் 'மரம் வளர்ப்பு' நிலமாக மாற்றப்படும்.

சலுகைகள் :

இத்திட்டத்திற்கு நன்கொடை அளிக்கும் நபரின் அல்லது அவர் விரும்பும் நபரின் பெயரில் இந் நிலம் அழைக்கப்படும்.

* பத்தாண்டுகளுக்கு ஒவ்வொரு ஆண்டும் சாதாரண நாட்களின் போது இரண்டு நாட்கள் தங்க, தங்கு வசதிகள் இலவசமாக அளிக்கப் படும்.
* பத்தாண்டுகளுக்கு ஒவ்வொரு ஆண்டும் 5 நபர் களுக்கு சிறப்புநுழைவு தரிசன வசதி செய்து தரப்படும்.

நன்கொடை : ரூ. 15,000

### விருக்ஷ பிரஸாதம்

இத்திட்டத்தின் கீழ் ஒவ்வொரு ஆண்டும் 100 பழ அல்லது மலர் விதைகள் விநியோகிக்கப்படும்.

சலுகைகள் :

* பத்தாண்டுகளுக்கு ஒவ்வொரு ஆண்டும் சாதாரண நாட்களின் போது இரண்டு நாட்களுக்கு இலவச தங்கு வசதி அளிக்கப்படும்.
* பத்தாண்டுகளுக்கு ஒவ்வொரு ஆண்டும் 5 நபர் களுக்கு சிறப்பு நுழைவு தரிசன வசதி அளிக் கப்படும்.
* ஐந்தாண்டுகளுக்கு ஒவ்வொரு ஆண்டும் 5 நபர் களுக்கு சிறப்பு நுழைவு வசதி மேறகொள்ளப் படும்.

நன்கொடை : ரூ. 2000

### வன சம்ரக்ஷண பாகஸ்வாமயம்

(காடு வளர்ப்பில் நும் பங்கு)

இத்திட்டத்தின் கீழ் ஏழுமலைகளில் இயற்கையான காட்டுச் சூழ்நிலை பாதுகாத்து மேம்படுத் தப்படும்.

சலுகைகள் :

* இத்திட்டத்தில் பங்கேற்கும் நன்கொடையாள ரின் ஆர்வத்தை நினைவுகூறும் வகையில் அவர்தம் பெயர் தேர்ந்த இடத்தில் காட்சியாக் கப்படும்.
* ஓர் ஆண்டின் போது, 5 நபர்களுககு சிறப்பு நுழைவு தரிசன வசதி மேற்கொள்ளப்படும்.

நன்கொடை : ரூ. 1000

### அத்யயன வனாலு

இத்திட்டத்தின் கீழ், தாவர இயல் பூங்காவில் ஒரு குறிப்பிட்ட செடியினம் நடப்பட்டு பராமரிக் கப்படும்.

சலுகைகள் :

* செடியருகே நன்கொடையாளரின் பெயர் காட் சியாக்கப்படும்.

நன்கொடை : ரூ. 500

### ஸ்மாரக வனாலு

(நினைவு மரங்கள்)

இத்திட்டத்தின் கீழ் தோப்பு ஒன்றில் அங்கு விளையக்கூடிய ஒரு குறிப்பிட்ட 10 மரவகைகள் நடப்பட்டு, 5 ஆண்டுகள் அவை பராமரிக்கப்படும்.

சலுகைகள் :

* நன்கொடையாளரின் பெயர் அத்தோப்பிற்கு வைக்கப்படும்.

### விருக்ஷ தத்ததா

(மர தத்தெடுப்பு)

இத்திட்டத்தின் கீழ் திருமலை மலை வழிச்சாலை ஓரமாக மரம் நடப்பட்டு தத்து எடுத்துக்கொள் ளப்படும்.

சலுகை :

* மரத்தின் அருகே நன்கொடையாளரின் பெயர் காட்சியாக்கப்படும்.

நன்கொடை : ரூ. 250

ஏழுமலையான் நின்றருளும் இப்புனித மலைகளை பசுமையும், அழகும் மிளிர்ந்து விளங்கிட, மேற்படி திட்டங்களுக்கு தாராளமாக நன்கொடை அளிக்க முன் வருமாறு பக்தர்கள் கேட்டுக் கொள் ளப்படுகிறுர்கள்.

கீழ்க்கண்ட முகவரிக்கு நன்கொடை அனுப்புங்கள்

THE EXECUTIVE OFFICER, T.T. DEVASTHANAMS - TIRUPATI-517501.

## மதிப்புரை

**அருளிச் செயல் அமுதம் :**

(இயற்றியவர். திருக்கூடநதை சௌரிராஜ திருவேங்கடததான், 1993. நூல் கிடைக்குமிடம் எஸ். திருவேஙகடத்தான், எ. 4. நான்காம குறுககுத தெரு, எம்.சி. நகர. சென்னை-600064: பக்கங்கள் 8 + 124; விலை ரூ. 12-00)

திரு. எஸ். திருவேஙகடத்தான் வைணவ இலக்கியத்தில ஆழங்கால்படடவர்; வடமொழி அறிஞர்; திருமால நெறியில மிக்கு ஈடுபாடுடையவர்.

'தெரித்தெழுதி வாசிததுககேட டும் வணங்கி வழிபட்டும் பூசித் தும் போக்கினேன் போது' என் னும் திருமழிசைப்பிரானின் கூற் றுக்கிணங்க நாலாயிரத் திவ்வி யப் பிரபந்தம் மற்றும் ஆசா ரியப் பெருமக்களின் நூல் கள் வாயிலாகவும், காரப்பங் காடு வேங்கடாசாரிய சுவாமி. வேளுக்குடி வரதாசாரிய சுவாமி போன்ற வைணவ மாநிதிக ளான மகானகளின் உபந்நியா சங்கள் மூலமாகவும் மகாவிஷ் ணுவின் அவதாரப் பெருமைக ளையும் திருக்கலியாண குண நலன்களையும வைணவககொள் கையின் நுட்பஙகளையும் பக வத் விஷயம், அருளிச் செயல் வியாக்கியானங்கள, சம்பிரதாய விசேஷார்த்தங்கள் ஆகியன வற்றையும் தெரிந்து கொண்டு, பக்தி இலக்கியத்திற்கும், குறிப் பாக, திருமால்நெறிக்கும் உய ரிய தொண்டு புரிநது வரு பவர். தான் பெற்ற இன பம் பெறுக இவ்வையகம் எனபதற்கொப்ப, அவை பற றித் தெளிவாகவும் நயததுட னும எழுதியும் பேசியும வரும வைணவச் செயமல. திருமால் யதிராஜ பாதுகா, ஸப்தகிரி போன்ற சமய இதழ்களில் அவர் எழுதிய கட்டுரைகள் இரு பததேழும், கணவனின் செவ் விய அருள்நெறிக்கு உதவும் வகையில் இறைவனின் புகழ் பரப்பும் பாடல்கள் புனையும் அவரது வாழ்க்கைத் துணைவி திருமதி சரோஜா திருவேங்கடத் தான் இயற்றிய பகதிப்பாடல் கள் ஒனபதும் கொண்டு திரும கள கேள்வனின் அருள் மணம் வீசும் அரியதொரு தொகுப்பா கும இநநூல்.

சிறு சிறு கடடுரைகளே எனி னும் இனிமையும் தெளிவும துலங்க, வாசிபபோரின் உள் ளததைத் தொட்டு அவரகளைப் பக்தி இலக்கியத்தின் பாலும் அவ்விலக்கியத்தின் செம்பொரு ளான இறைவனின் பாலும் ஈடு பாடு கொள்ளசசெய்வது அவற் றின் சிறப்பு.

ஆழ்வாரகள், திருவேங்க டதது எம்பெருமான், மசசாவ தாரம், வாமனாவதாரம், அரியு ருவம தாங்கிய அழகியானான நரசிம்மாவதாரம், பெரிய பிராட் டியின் சீர்மை, கிருஷ்ணவதாரம் முதலியவை பற்றிப் போற்றிய ருளிய பாசுரங்களின் விளக்கங் கள், விஷ்ணு ஸஹஸ்ரநாமத் தில் 340, 644ஆவது திருநாம மாக விளங்கும் 'சௌரி' என் னும் பதத்திற்கு 'தன பராக் ரமத்திற்கு ஈடுஇணையிலலாத வீர்யவான்' என முதலாவ தாகப் பொருள்கூறி. சொல்லிய தையே மீண்டும் சொல்லல் என் னும் வழுவினுக்கு ஆளாகாது, இரண்டாவதாக, திருக்கண்ணபு ரத்தில் 'உத்பலாவதக திவ்ய விமானத்தில் எழுந்தருளியிருக் கும் சௌரிப்பெருமாள்' என்னும் பராசரபட்டரின் வியாக்கியான நயம், பலதிவ்விய தேசஙகளில் உறையும் அரசசை மூர்த்திக ளைப் பற்றிய ஆழ்வாரகளின போற்றிப்பாடல்கள், மணவாள மாமுனிகள், ஸ்ரீநிகமாந்த மகா தேசிகன் ஆகிய வைணவ ஆசாரியப் பெருந்தகைகளின மாண்பு, திருநாம மகிமை ஆகி யன நூலின மதிப்பினை யும் பயனையும் உயர்த்துகின் றன என்பதில் சிறிதும ஐய மில்லை. சிறப்பாக, 'ஆழ்வார களின் பொது அறிவுரைகள்' சாமான்ய மக்களும் இறையன்பு பூண்டு, தஙகள் வாழ்வினை இனிமையாக்கிக்கொள்ள உத வும் வகையில அமைநதுள்ளன.

நூலின் இறுதியில உள்ள 'திருமால் இசைபபாடலகள' இறைவனின் புகழ்பாடி இனிமை சேரப்பனவாகும். அவற்றுள் 'அ' முதலாக 'ஔ' வரையிலான எழுத்துககளைத் தொடக்கமாகக் கொண்ட 'உயிர் எழுத்தில் உததமன்', 'சிறிய திருவடி மகிமை' என்னும் இருபாடல்களும் சிறுவர் பாட நூல்களில் சேர்க்கத்தக்கவையா கும்.

ஆழ்வார்களின் அருளிசசெ யல்களை அநுபவிப்பதற்கான அறிமுக நூலாகும் இந்த 'அரு ளிச்செயல் அமுதம்'

அ. நடராஜன்,
திருப்பதி.



திதி. தேவஸ்தானத்தாரின்

# ஸ்ரீபாலாஜி ஆரோக்ய வரபிரஸாதினி திட்டம்

பன்னெடுங்காலமாக, ஸ்ரீவேங்கடேஸ்வரசுவாமி நின்றவண்ணம் அருள் புரிந்திடும் திருமலையானது புகழ்பெற்ற ஒரு புனிதத்தலமாக விளங்கி வருகிறது. தங்களுடைய மனக்குறைகள் மறையவும், பிரச்சனைகள் தீரவும் நாள்தோறும் ஆயிரக்கணக்கான யாத்திரிகர்கள் திருமலைக்கு வந்த வண்ணம் இருக்கின்றனர்.

வாழ்க்கையில் இயற்கையின் கொடுமையால் பல வகைகளில் துயருறும் மனிதர்களுக்கு உதவிடும் வகையில் தி.தி. தேவஸ்தானம் பல திட்டங்களை மேற்கொண்டு வருகின்றது. இந்த வகையில் மருத்துவமனைகள், தொழுநோய் விடுதிகள், உடல் ஊனமுற்றோர் மறுவாழ்வு இல்லம், பார்வையற்றோர் இல்லம் என்று பல நற்பணி அமைப்புககளை நடத்தி வருகின்றது. மேலும் பொது மக்களுக்கு நவீன மருத்துவ வசதிகள் அமைத்துத் தரும் வகையில், புதுவை - ஜிப்மர், புதுடில்லி அகில இந்திய மருத்துவக்கழகம், சண்டிகார் - முதுகலை மருத்துவமையம் ஆகியவற்றிற்கு நிகராக தி. தி. தேவஸ்தான வரலாற்றில் பொன்னெழுத்துக்களால் பொறிக்கப்படும் வகையில் மேலாண்மை ஏழுமலையான் திருவருளால் ஸ்ரீவேங்கடேஸ்வரா மருத்துவ ஆராய்சசி நிலையம் ஒன்றினை அண்மையில் திருப்பதியில் நிறுவி உள்ளது. அதிநவீன மருத்துவ சாதனங்களுடன் கூடிய இந்நிறுவனம் ஏழை மக்களுக்குப் பெரிதும் பயன்பட வேண்டுமென்பதே மேலாணமையின் பெரு விருப்பமாகும். இந்த விருப்பம் பெருமளவில் வெற்றியடைய வேண்டுமென்றால் இரக்கமுள்ள மக்களின் முழு ஒத்துழைப்பும் தேவை. இதனை மனதிற்கொண்டு "ஸ்ரீபாலாஜி ஆரோக்யவரபிரஸாதினி" எனும் புதிய திட்டத்தை தி.தி. தேவஸ்தான மேலாண்மை புகுத்தியுள்ளது.

திட்டச் சுருக்கம்

இத்திட்டத்திற்கெனப் பொதுமக்கள் ரூ. 1000/- அல்லது அதைப்போல பன்மடங்கு, / ரூ. 1 இலட்சம்,/ 5 இலட்சம்,/ 10 இலட்சம் என தி.தி. தேவஸ்தானத்திற்கு நன்கொடை அளித்தால், அந்தத் தொகைக்கு ஈடாகத் தன்பங்காக தேவஸ்தான மேலாண்மையும் நிதி ஒதுக்கி, மொத்த தொகையானது தேசியமாக்கப்பட்ட வங்கிகளில் முதலீடு செய்யப்படும். அத்தொகைக்கு வரும் வட்டித்தொகை மேற்படித் திட்டத்திற்குப் பயன்படுத்திக் கொள்ளப்படும்.

ரூ. 10 இலட்சம் அல்லது அதற்கு மேற்பட்டு நன்கொடை அளிக்கும் நபர்களின் பெயரைக் கொண்டு இவ் ஆராய்ச்சி நிறுவனத்தில் ஆராய்ச்சி பதவி ஒன்று அமைக்கப்படும்.

தனிநபர், குடும்பம், நிறுவனம், கழகம் பெயர்களில் நன்கொடை அளிக்கலாம்.

ரூ. 5 இலட்சம் மற்றும் அதற்கு மேற்பட்டு நன்கொடை அளிக்கும் நபர்களின் பெயர்கள் மருத்துவமனை வரவேற்பு அரங்கில் காட்சியாக்கப்படும்.

பயன்பெறும் நோயாளிகளின் அடையாள அட்டையில் நன்கொடையாளரின் பெயர் அச்சடிக்கப்படும்.

மற்றைய பயன்களும், வசதிகளும்

இத்திட்டத்திற்கென வழங்கப்படும் நன்கொடைக்கு வருமானவரிச் சட்டப் பிரிவு 80 (G) கீழ் வருமானவரி விலக்கு அளிக்கப்படும்.

நன்கொடையாளர்களின் குடும்ப நபர்களுக்கு கட்டண அறைகள் / குளிர்ச்சாதன அறைகள் மருத்துவமனையில் ஒதுக்கப்படும்.

ரூ.. 5 இலட்சம் அல்லது அதற்கு மேற்பட்டு அளிக்கப்படும் நன்கொடையாளர்களின் பெயர்கள் கட்டண அறைகளுக்கு வைக்கப்படும்.

ரூ. 5 இலட்சம் நன்கொடை அளிக்கும் நபர்களின் பரிந்துரை பேரில் ஆண்டு ஒன்றுக்கு அறுவை சிகிச்சை வசதி ஒன்று அளிக்கப்படும்.

இத்திட்டத்திற்காக அளிக்கப்படும் நன்கொடை தொகையானது "Executive Officer, T.T.D. Tirupati" எனும் பெயரில் வங்கி காசோலை மூலம் செலுத்தப்பட்டு, அதனை "Director, Sri Venkateswara Institute of Medical Sciences, Tirupati" எனும் முகவரிக்குக் கீழ்க்காணும் தகவல்களுடன் அனுப்புதல் வேண்டும்.

ரூ.1 இலட்சம் அல்லது அதற்கு மேற்பட்டுத் தொகை வழங்கும் நன்கொடையாளர்களின் குடும்ப நபர்களின் (மார்பளவு) புகைப்படங்களும் மற்றும் முழுமுகவரியும் அனுப்புதல் வேண்டும்.

வருமானவரி விலக்குச்சான்றிதழ் அளிக்கப்பட வேண்டியவரின் பெயர், முகவரி தகவல்களை அனுப்புதல் வேண்டும்.

**The Executive Officer, T.T. Devasthanams, Tirupati.**

அல்லது

**The Director, Sri Venkateswara Institute of Medical Sciences, Tirupati.**

# செய்திச் சுருக்கம்

### பரிணய உத்ஸவம்

ஸ்ரீபத்மாவதி தாயார பரிணய உத்ஸவம் 18-5-93 முதல் மூன்று நாட்களுக்குத் திருமலையில் வெகுச்சிறபபாகக் கொணடாடப்பட்டது. திருமலைககோயிலிலிருந்து ஸ்ரீமலையப்ப சுவாமி (கோயில் உத்ஸவர்) தன் துணைப்பெண் தெய்வங்களான ஸ்ரீதேவி, பூதேவி உடன் வர திருமலை மாட வீதிகளில் வீதிவலம் மேற்கொண்டு, திருமலை நாராயணகிரி மலரத் தோட்டததை அடைய, அங்கு இறைவனின் திருமண நிகழ்ச்சிகள் இனிது நடைபெற்றன. ரூ. 5000/- செலுத்தி யாத்திரிகர்கள் பங்கேற்கும் இவ் ஆர்ஜித சேவையில் எட்டுக் குடும்பத்தினர கட்டணம் செலுத்திப் பங்கேற்றனர். இந்நிகழ்ச்சியில், ஆந்திர மாநில ஆளுநர் திரு. கிருஷ்ணகாந்த் அவர்கள் தன் குடும்பத்தாருடன் பங்கேறறார்.

### ஆளுநர் வருகை

ஆந்திர மாநில ஆளுநர திரு. கிருஷ்ணகாநத அவர்கள தன குடும்பத்தினருடன 20-5-94 அன்று திருமலைக்கு வருகை புரிநதார. பின்னர அனறு மதியம திருப்பதியில் உளள ஸ்ரீவேங்கடேஸ்வரா ஆராயச்சி மறறும் மருத்துவ நிலயத்திற்கு (ஸ்விம்ஸ்) வருகை புரிநது பல்வேறு துறைகளைப் பற்றிய தகவல்களைக் கேட்டுத தெரிந்து கொண்டார். அனறு மாலை தன் குடும்பத் தாருடன் திருச்சானூர் ஸ்ரீபத்மாவதி தாயார் கோயிலுக்குச் சென்றார.

* * *

திருப்பதி இரயில் நிலையத்தின் எதிரிலும் திருமலை பேருந்து நிலையத்திற்குப் பின்புறமும் உள்ள தி.தி. தேவஸ்தானத்தாரின் முதல் தரும சத்திரக்கட்டிடம் மிகவும் பழமையானதால், அதனை இடித்து விட்டு அங்கு ரூ. 13 கோடி செலவில் நான்குமாடிக் கட்டிட வளாகம் ஒன்று விரைவில் கட்டப்படும். அஞ்சல் அலுவலகம், வங்கி, உணவகம் உள்ளிட்டுத் தங்குக்கொட்டகைகள் மறறும் 600 அறைகளும் இககட்டிடததில் அமைந்திடும். மேலும் இக்கட்டிடமும் அருகு உள்ள இரயில் முன்பதிவு அலுவலகக்கட்டிடமும் மேம்பாலம் ஒன்றின் மூலம் இணைக்கப்படும.

* * *

### இணைச்செயலாட்சித் தலைவர்

தி.தி. தேவஸ்தானத்தாரின் புதிய இணைச் செயலாட்சித் தலைவராக திரு. சி.எச். சதய நாராயணு அவர்கள் 26-5-94 அன்று பதவி ஏற்றுககொண்டார்.

* * *

### நன்கொடை

ஆந்திர மாநிலம் கிழக்குக் கோதாவரி மாவட்டத்தைச் சார்ந்தவரும் தற்போது அமெரிக்காவில் குடியிருப்பவருமான திரு. சதிஷ் கஸ்த்தூரி அவர்கள் அண்மையில் தன் குடும்பத்தாருடன் திருமலைக் கோயில் தரிசனத்திற்கு வந்தபோது, தி.தி. தேவஸ்தான நித்ய அன்ன தானத் திட்டத்திறக்கென 4000 டாலர்களும், காடு மேம்பாட்டுத் திடடத்துறைக்கென ரூ. 10.000மும், தி.தி. தேவஸ்தான பொது நிதி உதவிக்கென 8000 டாலர்களும வழங்கினார்.

* * *

தி.தி. தேவஸ்தான சமய நூல் வெளியீட்டுத்துறையின் ஓததிசைவாளரான டாக்டர் எஸ்பி. இரகுநாதசாரயா அவரகள அணமையில் திருப்பதி சம்ஸ்கிருத விதயாபீடத்தின் துணை வேநதராக நியமிக்கப்பட்டுளளார். அஞ்சல் வழிமூலமாக வடமொழிப பயிறசிததிட்டத்தினை விரைவில விதயாபீடம் செயறபடுத்தும எனறு தான பங்கேறற நிருபர கூடடத்தில புதிய துணைவேநதர அறிவித்தார்.

* * *



(அண்மையில் தி.தி. தேவஸ்தான திவ்யப்பிரபந்த திட்டத்துறை சார்பில் திருவரங்கத்தில் நடைபெற்ற உடையவர் ஜெயந்தி நிகழ்ச்சியின் போது, ஸ்ரீமான் உ. வே. யதிராஜ இராமானுஜ ஜீயர் அவர்கள் கௌரவிக்கப்பட்டபோது)

Edited and published on behalf of T.T. Devasthanams by K. Subba Rao, M.A., and Printed at T.T.D. Press
M. Vijayakumar Reddy, Manager, T.T.D. Press, Tirupati - 517 507

